# ஆரோக்கியத்தைப்பெற சமநிலை உணவை சாப்பிடுங்கள்



விடமின்கள்




புரதசத்துக்கள்



தாதுப்பொருள்கள்



மாவுசத்துக்கள்




ஒவ்வொரு வகையான உணவும் வெவ்வேறு விதமான உணவுச்சத்துக்கள் அடங்கியதாயிருக்கிறது. அதனால்தான் ஆரோக்கியத்திற்கும், சக்திக்கும் மிக அவசியமான ஐந்துவகை உணவுச்சத்துக்களையும் பெற வெவ்வேறு உணவுப்பொருள்களை சாப்பிடவேண்டும். இதைதான் சமநிலை உணவு என்று கூறப்படுகிறது. ஆகவே சமநிலை உணவில் (1) விடமின்கள், (2) புரதசத்துக்கள், (3) தாதுப்பொருள்கள், (4) மாவுசத்துக்கள், (5) கொழுப்புகள் அடங்கியிருக்கவேண்டும். இந்த ஐந்து வகை சத்துக்களும் மிகவும் அவசியமானவைதான். நீடித்து நிற்கும் சக்தியை அளிக்கும் கொழுப்புகளிடையே மிக சௌகரியமானதும், ஊட்டமளிப்பதுமான ஒன்று டால்டா. எல்லா வித சமையல்களுக்கும் உகந்தது. சீல் செய்த டின்களில் எப்பொழுதும் புதிதாகவும் துப்புரவாகவும் உங்களுக்கு கிடைக்கிறது.

சமநிலை உணவைப்பற்றிய உபயோகமான
பூரண விவரங்கள்

இலவசமாகத் தேவையானால் இன்றே—
அல்லது என்று வேண்டுமானாலும்—எழுதுங்கள்:

**தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்**

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1

---

# சக்தியைப்பெற டால்டாவில் சமையுங்கள்





**சமநிலை உணவில் உங்களுக்குத்தேவையான கொழுப்பை அளிக்கிறது**

HVM. 175-30 TM



# கல்கி பொருளடக்கம்

மலர் 11 இதழ் 31 — 1952 மார்ச் 2 — கர ஹ மாசி 19



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# இரு வார ஸேவிங்ஸ் திருவிழாக்கள்

நாடெங்கும் நடைபெறும்போது

## நீங்களும் கலந்து கொள்ளுங்கள்.

உங்கள் சேம நிதிகளைத் தாராளமாக

## உத்தரவாதமுள்ள பாதுகாப்புப் பத்திரங்களில்

## முதலீடு செய்யுங்கள்.

### 12 - வருஷ

நேஷனல் ஸேவிங்ஸ் ஸர்ட்டிபிகேட்டுகள்

(தவணை முடிவில் 4·16% வட்டி கிடைக்கும்)

### 10 - வருஷ

டிரெஷரி ஸேவிங்ஸ் டிபாஸிட்டுகள் ஸர்ட்டிபிகேட்டுகள்

(வருஷ வாரியில் 3½% வட்டி அளிக்கப்படும் அல்லது பாங்கியில் செலுத்தப்படும்)

தபால் ஆபீஸ் ஸேவிங்ஸ் பாங்கி

(ரூ. 200-க்கு மேற்பட்ட இருப்பின் மீது வருஷம் ஒன்றுக்கு 2% வட்டி உண்டு)

வட்டிக்கு வருமான வரி இல்லை

உங்கள் பணத்துக்கு நல்லதொரு வரும்படி
நாட்டுக்கும் நல்லதொரு வருமானம்

இந்தியா நேஷனல் ஸேவிங்ஸ் கமிஷனர், நிதி மந்திரி காரியாலயம் கார்ட்டன் காஸில், ஸிம்லா வெளியீடு.

A.C. 342 TM.



கல்கி

மலர் 11 } தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் } இதழ் 31

# தலைவர் யார்?

சென்னைச் சட்டசபையில் காங்கிரஸ் கட்சி அறுதியான பெரும்பான்மை பெறவில்லை; ஆனால் தனிப் பெரும் கட்சியாக வந்திருக்கிறது. மொத்தம் 375 அங்கத்தினரில் 152 அங்கத்தினர் காங்கிரஸ் கட்சியினர்.

காங்கிரஸ் கட்சி அங்கத்தினர் கூட்டம் கூடித் தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று மேலிருந்து கட்டளை வந்திருப்பதாய் அறிகிறோம். இந்தக் காரியத்துக்காகச் சென்னைச் சட்டசபையின் புதிய காங்கிரஸ் அங்கத்தினரின் கூட்டம் சீக்கிரத்தில் நடைபெறக் கூடும் என்றும் தெரிகிறது.

அப்படிக் கூடுகிற அங்கத்தினர் ஒரு தடவைக்குப் பல தடவையாக யோசித்துத் தக்க தலைவர் ஒருவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இது விஷயத்தில் இவர்கள் செய்யும் முடிவைப் பொறுத்திருக்கிறது இந்த மாகாணத்தின் வருங்கால நல்வாழ்வு என்று சொல்லுவது மிகையாகாது.

சென்ற முறை பொதுத் தேர்தல் நடந்த அடியோடு கட்சித் தலைவர் பதவிக்குச் சரியானவரைத் தேர்ந்தெடுக்கத் தவறியபடியினாலேதான் இம்மாகாணம் இன்று இந்த நிலைக்கு வந்திருக்கிறது. இதைப் புதிய அங்கத்தினர் ஒவ்வொருவரும் நூறு தடவை நினைத்துப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

முதல் முறையில் சரியான தலைவரைத் தேர்ந்தெடுக்காதபடியால் வருஷா வருஷம் தலைவர் தேர்தல் குழப்பம் நடந்தது. அதனால் பல கேடுகள் விளைந்தன.

இந்த முறை காங்கிரஸ் கட்சித் தலைமைத் தேர்தல் முன் தடவை நடந்த தேர்தலைக் காட்டிலும் மிக மிக முக்கியமானது.

இம்முறை பெரும்பான்மையில்லாமல் தனிப்பெருங் கட்சியாயிருக்கும் காங்கிரஸ் கட்சியார், மற்றும் சிலரைச் சேர்த்துக் கொண்டு மந்திரிசபை அமைக்க நேரிடலாம்.

அல்லது மற்றக் கட்சிகளும் உதிரிகளும் சேர்ந்து மந்திரி சபை அமைக்கும் பட்சத்தில், காங்கிரஸ் அங்கத்தினர் எதிர்ப்புக் கட்சியாயிருந்து வேலை செய்ய நேரும்.

இந்த இரண்டு நிலைமையையும் சமாளிப்பதற்குக் காங்கிரஸ் கட்சித் தலைவர் முற்றும் தகுதி வாய்ந்தவராக அமைய வேண்டியது மிகவும் அவசியம்.

* * * *

காங்கிரசுக்கு எதிர்ப்புக் கட்சிகளில் மிகத் திறமைசாலிகள் சிலர் இம்முறை வெற்றி முழக்கத்துடன் சட்டசபைக்கு வந்திருக்கிறார்கள்; அவர்களில் வில்லாதி வில்லர்களும் வல்லாள கண்டர்களும் இருக்கிறார்கள்.

பிரஜா கட்சியில் வந்திருக்கும் தென்னெட்டி விசுவநாதன் அசகாய சூரர்; விவாதத்தில் மிக வல்லவர்.

பழைய சட்டசபையில் கம்யூனிஸ்டு அங்கத்தினர் இரண்டே இரண்டு பேர் இருந்து என்னபாடு படுத்தினார்கள் என்பதை அறிந்திருக்கிறோம்.

இப்போது அவர்கள் பெருங்கூட்டமாக வந்திருக்கிறார்கள். வலிமை மிக்க கட்டுப்பாடு வாய்ந்த கூட்டமாக வேலை செய்வார்கள். ஸ்ரீ ராமமூர்த்தி, ஸ்ரீ ஜீவானந்தம் போன்றவர்கள் விஷய ஞானத்துடன் விவாதத் திறமை மிக்கவர்கள். ஆந்திர நாட்டிலிருந்து வாதத்திலும் பிடிவாதத்திலும் தேர்ந்த விடாக் கண்டர்கள் சிலர் வந்திருக்கிறார்கள்.

காங்கிரஸ் கட்சிக்குத் தலைவராக வருகிறவர் மேற்படியார்களை யெல்லாம் சமாளிக்கக் கூடிய தீரரா யிருக்க வேண்டும். தலைமை மந்திரியா யிருந்து அரசாங்கத்தை நடத்தவும், எதிர்ப்புக் கட்சித் தலைவரா யிருந்து ஆற்றலுடன் போராடவும் அவர் தகுதி வாய்ந்தவரா யிருக்க வேண்டும். சீலமும் ஒழுக்கமும் அரசியல் ஞானமும் அறிவுத்திறனும் தீர்க்கதிருஷ்டியும் விவாதத் திறமையும் சுடச் சுடப் பதில் கொடுக்கும் சக்தியும் படைத்தவரா யிருக்க வேண்டும்.

ஓமந்தூர் ரெட்டியாரின் மந்திரி சபையில் மேற்கூறிய ஆற்றல்கள் படைத்தவராக டாக்டர் சுப்பராயன் இருந்தார். மேல் சட்ட சபையில் காங்கிரஸ் கட்சித் தலைவராக டாக்டர் சுப்பராயன் இருந்தபோது அச் சபை உண்மையிலேயே உயிர் பெற்றதாக விளங்கியது. விவாதங்கள் ரஸமாயிருந்தன. முஸ்லிம் லீக் அங்கத்தினர்களுக்கு டாக்டர் சுப்பராயன் அளித்த பதில்கள் காலஞ்சென்ற தீரர் சத்தியமூர்த்தியை ஞாபகப்படுத்தின.

டாக்டர் சுப்பராயன் ஓமந்தூர் மந்திரி சபையிலிருந்து விலகியதிலிருந்து அந்த மந்திரி சபை நாளுக்கு நாள் பலவீனப்பட்டு வந்தது. சட்ட சபையில் காங்கிரஸின் சார்பாகவும் காங்கிரஸ் மந்திரிகளின் சார்பாகவும் நல்ல முறையில் பேசக் கூடியவர்கள் இல்லாமற் போயினர்.

சென்னையில் காங்கிரஸ் பலவீனம் அடைந்ததற்கு இதுவும் ஒரு முக்கிய காரணம் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

* * *

தற்போது சென்னைச் சட்ட சபைக்குக் காங்கிரஸ் சார்பாக வந்திருக்கும் 152 அங்கத்தினரில் மேற்கூறிய தகுதிகள் எல்லாம் பொருந்தியவர் யார் என்பதை அங்கத்தினர் தீர்க்காலோசனை செய்து பார்த்து, ஏகமனதாக அத்தகைய தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். தலைமைப் பதவியை ஏலத்தில் விடுவதோ, வோட்டு எடுப்பதின் மூலம் தீர்மானிப்பதோ உசிதமாகாது. அதனால் நன்மை விளையாது. மேலும் பலவீனந்தான் ஏற்படும்.

இப்போது தேர்ந்தெடுக்கப்பட்டு வந்திருப்பவர்களிலிருந்து அத்தகைய பூரண தகுதி வாய்ந்த தலைவரை, — தற்போதைய நெருக்கடியைச் சமாளிக்கக் கூடியவரை,—பொறுக்க முடியாது என்று தோன்றினால், வெளியில் உள்ள சிறந்த காங்கிரஸ் வாதிகளிலிருந்தாவது அத்தகைய தலைவர் ஒருவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். சுயநலமோ, குறுகிய நோக்கமோ, அகம்பாவமோ இதற்குத் தடையாக நிற்க இடங் கொடுக்கக் கூடாது.

தலைவர் தேர்ந்தெடுப்பதில் ஏக மனதான முடிவுக்கு வர இயலாவிட்டால், கட்சியின் காரியதரிசிகளை மட்டும் தேர்ந்தெடுத்துவிட்டு, கட்சித் தலைவர் தேர்தலைத் தள்ளிப் போடுவதே நலமாயிருக்கும். இன்றைக்கு அவசரப்பட்டு ஒருவரைத் தலைவராகத் தேர்ந்தெடுப்பதும் நாளைக்கு அவரை மாற்ற வழி தேடுவதும் சென்னை மாகாணத்தின் அரசியலை மேலும் குலைப்பதற்கே ஏதுவாகும்.

# காங்கிரஸுக்குப் புத்துயிர்

தமிழ் நாட்டில் காங்கிரஸ் ஸ்தாபனத்தைப் புனர் நிர்மாணம் செய்து புத்துயிர் அளிப்பது பற்றி யோசனைகள் நடந்து வருகின்றன. சென்ற வாரத்தில் பிரபல காங்கிரஸ் வாதிகள் 600 பேர் சென்னையில் கூடிக் கலைந்தார்கள். பலன் என்ன வென்று கேட்க வேண்டிய அவசியம் இல்லை. "நாம் இத்தனை பேர் இருக்கிறோம்" என்ற எண்ணமே சோர்வுற்றவர்களுக்கு மனோ தைரியம் அளிக்கக் கூடியது.

காங்கிரஸுக்குப் புத்துயிர் அளிக்க விரும்புகிறவர்கள் பின் வரும் மூன்று விஷயங்களை ஞாபகத்தில் வைத்துக் கொள்வது நலம்.

(1) தமிழ் நாட்டுக் காங்கிரஸில் கோஷ்டிப் பிளவுகள் பல விபரீத விளைவுகளுக்குக் காரணமாயிருந்திருக்கின்றன.

ஆகையால், புனர் நிர்மாணம் செய்யப்படும் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் கோஷ்டி மனப்பான்மைக்கு இடமிருக்கக் கூடாது. திருத்தி அமைக்கப்படும் கமிட்டியின் அங்கத்தினர்களின் பெயர்களைக் கேட்டதும், "ஓகோ! இனித் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் ஒற்றுமையாக வேலை செய்யும்" என்ற எண்ணம் பொது மக்களுக்கு ஏற்படும்படி புதிய கமிட்டி அமைய வேண்டும்.

(2) பழைய காங்கிரஸ் வாதிகளில் சிலர் பேரில் பொது மக்களுக்கு அதிருப்தி ஏற்பட்டிருக்கிறது. அதற்கு நியாயமான காரணமும் இருக்கலாம்; காரணமின்றிச் சந்தர்ப்பங்களின் சேர்க்கையினால் ஏற்பட்ட அதிருப்தியாகவும் இருக்கலாம். காங்கிரஸ் ஸ்தாபனத்தின் நன்மையை முன்னிட்டு அத்தகையவர்கள் தாங்களாகவே சிறிது காலத்துக்கு ஒதுங்கி நிற்பது நலம்.

இன்னும் சிலர் பிராய முதிர்ச்சி, உடல் தளர்ச்சி, மனச் சோர்வு முதலிய காரணங்களினால் தீவிரமான தொண்டு செய்யும் சக்தியை இழந்துவிட்டிருக்கிறார்கள். அத்தகையவர்களும் விலகிக் கொள்வது கௌரவமாயிருக்கும்.

(3) புதிய கமிட்டியில் அல்லது கமிட்டிகளில் வருகிறவர்கள் காங்கிரஸ் தமிழ்நாட்டில் தற்காலிகமாக இழந்துவிட்ட பொதுஜனத் தொடர்பை மீண்டும் நிலை நாட்டுவதற்கு உபயோகமானவர்களாயிருக்க வேண்டும். முழு நேரம் நிர்மாணத் தொண்டு செய்கிறவர்களாகவோ, வாக்கு வன்மையினால் பெருந் திரளான மக்களைக் கவரக் கூடியவர்களாகவோ இருக்க வேண்டும்.

வெறும் அலங்காரத்துக்காகவோ, அதிகார மோகத்தினாலோ காங்கிரஸ் கமிட்டிகளில் அங்கத்தினராக இருக்க விரும்புவது தற்போதைய நிலைமையில் பெருங் குற்றமாகும்.

நிர்மாணத் தொண்டினாலும் பிரசார வன்மையினாலும் மக்களின் உள்ளங்களைக் கவரக் கூடியவர்கள்தான் தற்சமயம் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் ஸ்தாபனங்களுக்குத் தேவை.

* * *

தமிழ் நாட்டில் காங்கிரஸ் எதிர்பார்த்த அளவு வெற்றியடையாததற்கு எத்தனையோ காரணங்கள் சொல்லப் பட்டிருக்கின்றன. காங்கிரஸ் மந்திரி சபையின் காரியங்களும் காங்கிரஸ் ஸ்தாபன ஊழல்களும் குறிப்பிடப் பட்டிருக்கின்றன.

எனினும், சரியான முறையில் பிரசார வேலை மட்டும் நடந்தால் மேற் கூறிய குறைபாடுகளையெல்லாம் மீறிக் காங்கிரஸ் அபேட்சகர்கள் வெற்றி பெறலாம் என்பதற்குப் பல உதாரணங்கள் கிடைத்திருக்கின்றன.

உதாரணமாக, சென்னை நகரையே குறிப்பிடலாம். சென்னை நகரில் ஹார்பர், ஆயிரம் விளக்கு, மயிலாப்பூர், திருவல்லிக்கேணி ஆகிய தொகுதிகளில் காங்கிரஸ் தேர்தல் பிரசாரம் இடைவிடாமல் நடந்து வந்தது. பற்பல பொதுக் கூட்டங்கள் நடைபெற்றன. மயிலாப்பூர் தொகுதியில் மட்டும் இருநூற்றுக்கு மேற்பட்ட காங்கிரஸ் பொதுக் கூட்டங்கள் நடைபெற்றன. அதற்குத் தகுந்த வெற்றி சென்னை நகரின் மேற்கூறிய தொகுதிகளில் காங்கிரஸுக்குக் கிடைத்தது.

# இரு புறமும் அபாயம்!




சென்னையில் நடந்த பொதுக் கூட்டத்தில் சோஷலிஸ்ட் தலைவர் ஸ்ரீ அசோக் மேத்தா "நாம் காங்கிரஸ் ஓட்டைப் படகிலும் ஏறக் கூடாது; கம்யூனிஸ்ட் முதலை வாயிலும் போகக் கூடாது!" என்றார்.

நல்ல முறையில் பிரசாரம் நடை பெறாத மற்ற மூன்று தொகுதிகளில்தான் காங்கிரஸ் அபேட்சகர்கள் தோல்வி அடைய நேர்ந்தது.

வெளியூர்களிலும் இத்தகைய உதாரணங்கள் பலவற்றைக் குறிப்பிடலாம்.

திராவிடக் கழகத்தின் கோட்டை என்று கருதப் பட்ட ஊர்களில் ஒன்று திருவாரூர். அந்த ஊரில் ஸ்ரீ கே. சந்தானம் தம் தலைமைக் காரியாலயத்தை ஏற்படுத்திக் கொண்டு வேலை செய்தார். அதற்குப் பலன் கிடைத்தது. திருவாரூரில் உள்ள சுமார் 12,000 வோட்டர்களில் 7,792 பேர் வோட்டுச் சாவடிகளுக்கு வந்து வோட்டுச் செய்தார்கள். இவர்களில் பெரும்பாலோர் — 4 270 பேர் — காங்கிரசுக்கு வோட்டுப் போட்டார்கள். 3,522 பேர்தான் காங்கிரஸுக்கு எதிராக வோட்டு அளித்தவர்கள்.

நாகைப்பட்டினத்தில் காங்கிரஸ் பிரசார வேலை சரிவர நடைபெறவில்லை. அந் நகரில் சுமார் 30,000 வோட்டர்கள் உண்டு. இவர்களில் 9,027 பேர்தான் வோட்டுப் போட்டார்கள். காங்கிரஸுக்கு 2,243 வோட்டுக்கள்தான் கிடைத்தன.

பிரசாரத்தின் அவசியத்தையும் அதனால் விளையக்கூடிய பயன்களையும் திருவாரூரும் நாகைப் பட்டினமும் நன்கு நிரூபித்திருக்கின்றன.

பொதுஜனத் தொடர்பை ஏற்படுத்திக் கொள்வதற்குப் பொதுக் கூட்டங்களும் வாக்கு வன்மையுள்ளவர்களின் பிரசங்கங்களும் மிக்க உதவியாகும் என்பதைப் பற்றிச் சிறிதும் ஐயமில்லை.

காங் ரஸுக்குப் புத்துயிர் அளிக்கும் முயற்சியில் இந்த அம்சத்தை முக்கியமாக ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

# டீ பார்ட்டிகள் ஒழிக!

தேசத்தில் சென்ற சில காலமாக எத்தனையோ "ஒழிக!" கோஷங்கள் கேட்கப்படுகின்றன. இவற்றில் "டீ பார்ட்டிகள் ஒழிக!" என்ற கோஷம் ஹைதராபாத்தில் முதன் முதலாகக் கிளம்பியிருக்கிறது. அந்த மாகாணத்தின் வெற்றி பெற்ற காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ டி. ஜி. பிந்து என்பவர் அந்த கோஷத்தைக் கிளப்பியிருக்கிறார். அவருடைய யோசனையை நாம் மனப்பூர்வமாகவும் உற்சாகமாகவும் ஆதரிக்கிறோம்.

"தேர்தலில் வெற்றி பெற்ற காங்கிரஸ்காரர்களுக்குச் சிலர் டீ பார்ட்டிகள் கொடுக்க முன் வருகிறார்கள். காங்கிரஸ் அங்கத்தினரும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். தற்போதைய நிலையில் அது அநாகரிகமும் அநுசிதமும் ஆகும்!" என்று மேற்படியார் கூறுவது மிக மிக உசிதமான விஷயம்.

நாடெங்கும் "உணவு போதவில்லை" "அரிசி கிடைக்கவில்லை" என்ற முறையீடுகள் பரவியிருக்கும் சமயத்தில் பொதுக் காரியங்களில் ஈடுபட்டவர்கள் டீ பார்ட்டிகள் கொடுப்பதோ, பெற்றுக் கொள்வதோ விரஸமான விஷயந்தான்.

டீ பார்ட்டிகளில் வெறும் வெந்நீரும் வறுத்த உமியுந்தான் கொடுக்கப்படுகிறது என்று சொல்ல

லாம். ஆயினும் அதைத்தான் பலர் அறியப் பகிரங்கமாக விருந்து வைத்துச் சாப்பிடுவானேன்! புகைப் படங்கள் எடுத்துப் பத்திரிகைகளில் போடுவானேன்! அனாவசியமாகப் பொது மக்களின் வயிற்றெரிச்சலைக் கிளப்புவானேன்!

வெற்றி பெற்ற காங்கிரஸ் அபேட்சகர்களை வாழ்த்துவதற்கு விரும்பினால் டீ பார்ட்டிகள் கொடுக்க வேண்டாம். பொதுக் கூட்டங்கள் நடத்தி அவர்களை வாயார வாழ்த்தட்டும். அம்முறை, பொதுஜனத் தொடர்பை வளர்த்துக் கொள்வதற்கும் ஒரு சாதனமாகப் பயன்படும்.

காங்கிரஸ்காரர்கள் சம்பந்தப்படும் எந்தப் பொது நிகழ்ச்சியிலும் டீ பார்ட்டிகளையும் மற்ற விருந்துகளையும் ஒழித்துக் கட்டி விடுவது நலம்.

# 'ஹிந்து' குடும்பத்தின் அன்னை

வெளி நாடுகளிலிருந்து வருகிறவர்கள் தமிழ் நாட்டிலே பார்த்து மகிழ்வதற்கு மாமல்லபுரத்துச் சிற்பங்கள், திருக்கழுக்குன்றத்துப் பட்சிகள், தஞ்சை — மதுரை — ஆலயங்கள், — இப்படிப் பல அற்புதங்கள் இருக்கின்றன.

சென்னைமா நகரில் அவ்வாறு வெளிநாட்டார் பார்த்து வியப்படையக்கூடிய ஸ்தாபனங்கள்,— தமிழர்கள் பெருமையடையக் கூடிய ஸ்தாபனங்கள், — இரண்டு இருக்கின்றன. ஒன்று "ஹிந்து" பத்திரிகைக் காரியாலயம்; இரண்டாவது, ஜெமினி ஸ்டூடியோ.

இவற்றில் "ஹிந்து" பத்திரிகையின் சரித்திரம் ஓர் இதிகாசம் என்று சொல்லுவதற்குரியது. காலஞ்சென்ற ஸ்ரீ எஸ். கஸ்தூரி ரங்கய்யங்கார் தமது நண்பர்கள் பலரைப்போல் வக்கீல் தொழிலில் மனம் செலுத்தாமல், அக்காலத்தில் "ஹிந்து" பத்திரிகையின் பொறுப்பை ஏற்றுக்கொண்டதிலிருந்து அவருடைய தார்மிகத் துணிச்சல் எத்தகையது என்பதை அறியலாம். அப்பொழுதெல்லாம் பத்திரிகைத் தொழில் லாபம் சம்பாதிப்பதற்குரிய தொழிலாகவே கருதப்படவில்லை. பொதுஜனத் தொண்டுக்குரிய சாதனமாகவே கருதப்பட்டு வந்தது. பத்திரிகை நடத்துவதில் எத்தனையோ கஷ்ட நஷ்டங்கள் இருந்தன. எனினும் ஸ்ரீ எஸ். கஸ்தூரி ரங்கய்யங்கார் துணிந்து அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். தமது வாணாளில் "ஹிந்து" பத்திரிகையை இந்தியாவில் இணையற்ற ஸ்தாபனமாகச் செய்தார். அவருடைய குமாரர்களும் அப்பணியை இன்னும் சிறந்த முறையில் இப்போது நிறைவேற்றி வருகிறார்கள்.

சென்ற வாரத்தில் துருக்கியிலிருந்து வந்திருந்த ஒரு பத்திரிகைப் பிரமுகர் "எங்கள் நாட்டில் 'ஹிந்து'வைப் போன்ற ஒரு பத்திரிகை கிடையாது" என்று சொன்னார். துருக்கியில் மட்டும் என்ன! இன்னும் பல தேசங்களில் "ஹிந்து"வைப் போன்ற ஒரு பத்திரிகை கிடையாது.

'கிறீச்' என்று அலறும் திடுக்கிடத்தக்க செய்தித் தலைப்புகளைப் பக்கம் முழுதும் நீட்டி, சிரப்பிக் கொட்டை எழுத்தில் அச்சிட்டு அமெரிக்காமுதலிய நாடுகளிலே கூடப் பத்திரிகை வெளியிடுகிறார்கள்.

நம் ஹிந்துப் பத்திரிகையிலோ ஆறாம் ஜார்ஜின் மரணத்துக்குக்கூட ஒரு பத்தித் தலைப்புத்தான் வெளியிடுகிறார்கள்.

ஆயினும் இந்தியா தேசத்தில் இன்று "ஹிந்து" இணையற்ற பத்திரிகையாக விளங்குகிறது.

இந்த மகத்தான வெற்றிக்கு "ஹிந்து" பத்திரிகை நிர்வாகிகள் எவ்வளவு பெருமை யடையலாமோ அவ்வளவு பெருமை இம்மாகாண வாசிகளாகிய நாமும் அடைவதற்கு இடம் உண்டு.

பத்திரிகையை வாங்கிப் படிப்பவர்கள் கௌரவமானவர்களாயிருந்தால்தானே, பத்திரிகையையும் அவ்வளவு கௌரவமாக நடத்த முடியும்!

சென்ற வாரத்தில் ஸ்ரீ எஸ். கஸ்தூரி ரங்கய்யங்காரின் தர்ம பத்தினியும் ஸ்ரீ கஸ்தூரி சீனிவாசன், கஸ்தூரி கோபாலன் இவர்களுடைய அன்னையுமான ஸ்ரீமதி கனகவல்லி அம்மாள் காலமடைந்தார் என்ற செய்தியை அறிந்தபோது "ஹிந்து" பத்திரிகையின் இதிகாச சரித்திரம் நமக்கு ஞாபகத்துக்கு வந்தது. ஸ்ரீ கஸ்தூரி ரங்கய்யங்கார் முதன் முதலில் அப்பத்திரிகையைப் பொதுநலத் திருப்பணியாக மேற்கொண்டு நடத்தத் தொடங்கிய போது எவ்வளவு கஷ்ட நஷ்டங்களை அனுபவித்திருக்க வேண்டும், அந்த சமயங்களில் அவருடைய வாழ்க்கைத் துணைவி எப்படி அவருக்குக் கை கொடுத்துத் தைரியம் அளித்திருக்க வேண்டும் என்று எண்ணிப் பார்க்கத் தோன்றியது. தற்போது அவருடைய புதல்வர்களின் நிர்வாகத்தில் "ஹிந்து" இணையற்ற செல்வாக்கு அடைந்திருப்பதைக் குறித்து அந்த அம்மாள் எப்படிப் பூரித்து மகிழ்ந்திருக்க வேண்டும் என்றும் நினைத்துப் பார்க்கத் தோன்றியது.

அந்த மூதாட்டியார் எண்பத்தாறு பிராயம் வாழ்ந்திருந்து இம் மண்ணுலகை நீத்து எம்பெருமானின் இணையடி நிழலை அடைந்திருக்கிறார்.

ஆயினும் பெற்று வளர்த்த அன்னையின் பிரிவைப் போல் துயரம் தரத் தக்கது வேறு என்ன இருக்க முடியும்!

ஸ்ரீ கஸ்தூரி சீனிவாசன் அவர்களுக்கும் அவருடைய குடும்பத்தாருக்கும் நமது மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# நெருப்புடன் விளையாடாதீர்!

சிலகாலமாக நம் நாட்டில் வெளியாகும் பேசும் படங்களில் ஏழைகளின் கஷ்டங்களையும் தொழிலாளிகளின் துயரங்களையும் காட்டுவது வழக்கமாகி வருகிறது. ஏழைகளின் கஷ்டங்களைக் காட்டுவதோடு நில்லாமல் பணக்காரர்களின் கொடூரங்களைப் பற்றிய காரசாரமான பேச்சுக்களையும் நிகழ்ச்சிகளையும் புகுத்தி வருகிறார்கள்.

இப்படிச் செய்வதின் மூலம் ஏழைகளின் கஷ்டங்களைத் தீர்க்க முடியாது. ஏழைகள் மேலும் ஏழையாவதற்கும் பணக்காரர்கள் மேலும் பணக்காரர்களாவதற்கும் தான் வசதி ஏற்படுகிறது.

இந்த முறையில் (Box Office) வெற்றி காண முயலும் சினிமா முதலாளிகள் நெருப்புடன் விளையாடுகிறார்கள் என்றே சொல்ல வேண்டும்.

# சொந்த வீடுதான்!




சென்னையின் புதிய கவர்னர் ஸ்ரீ பிரகாசா நல்ல நகைச்சுவையாளர் என்று தெரிகிறது. அப்படியானால் அவர் சொந்த வீட்டுக்கு வருவதாக வைத்துக் கொள்ளலாம்.

---

ஏழைகளுடைய கஷ்டங்களை மனமுருகும்படி சித்திரிப்பதினால் படங்கள் வருமான விஷயத்தில் வெற்றியடையக் கூடும். ஏனெனில் இந்நாட்டில் ஏழைகள் தான் 100 க்கு 99 பேர். அவர்கள் தங்கள் கஷ்டங்கள் திரையில் பிரதிபலிக்கப் பார்த்துக் கண்ணீர் விட்டு விட்டுப் போவார்கள். ஏழைகள் இம்மாதிரி பேசும் படங்களின் மாபெரும் வெற்றிக்குத் துணை புரிவது அவர்கள் செய்யும் எத்தனையோ தியாகங்களில் ஒன்றாய்ச் சேர்ந்து விடும்.

அத்துடன் மட்டும் நின்றால் பாதகமில்லை.

ஏழைகளின் வறுமை நிலையைச் சித்திரிப்பதாய் எண்ணி, மக்கள் உழைப்பையே வெறுக்கும்படியாகச் செய்வது தேசத்துக்கும் சமூகத்துக்கும் பெருந் துரோகமாகும்.

இந்தியா தேசத்தில் இப்போது செய்ய வேண்டிய மிக முக்கியமான பிரசாரம் ஒன்று உண்டு என்றால், அது உழைப்பின் பெருமையை உயர்த்திக் காட்டுவது தான்.

கம்யூனிஸ்ட் நாடாகிய ருஷியாவில் எடுக்கும் படங்களில் உழைப்பை உயர்த்துகிறார்கள். உழைப்பினால் தனி மனிதனும் சமூகமும் தேசமும் உயர்வதை எடுத்துக் காட்டுகிறார்கள்.

ஐசுவரியத்தில் புரளும் குபேர நாடாகிய அமெரிக்காவில் வெளியாகும் படங்களிலும் உழைப்பைச் சிறப்பிக்கிறார்கள்.

நம் இந்திய நாட்டுப் படங்களிலோ உழைப்பாளி "ஐயோ! நான் உழைக்க வேண்டியிருக்கிறதே!" என்று பிலாக்கணம் பாடிக்கொண்டு வேலை செய்கிறான். "ஏழைக்கு ஏது இன்பம்!" என்று ஏங்கிக் கொண்டு வேலை செய்கிறான். கற்பனைப் பணக்காரனைச் சபித்துக் கொண்டு வேண்டா வெறுப்பாய் வேலை செய்கிறான்.

உழைப்பவன் உழைப்பை விட்டு விட்டுப் பிச்சை யெடுக்கப் போவதை நம் படங்களில் பார்க்கிறோம்; திருடப் போவதைப் பார்க்கிறோம்; திடீரென்று அதிர்ஷ்டம் அடித்துப் பணக்கார முதலாளியாவதையும் பார்க்கிறோம்.

ஆனால் உழைப்பவன் உழைப்பினால் உயர்ந்து நல்ல நிலைமைக்கு வருவதை நம் நாட்டுப் படங்களில் சாதாரணமாகப் பார்க்க முடிவதில்லை.

இவ்விதம் உழைப்பைத் தாழ்த்திச் சோம்பேறிச் சுக வாழ்வை உயர்த்தும் பேசும் படங்களினால் நமது நாடு எவ்வளவு பயங்கரமான கேட்டை அடைகிறது என்று எண்ணிப் பார்ப்பவர்கள் திகில் அடைவார்கள்.

* * *

படங்களில் ஏழைகளையும் அவர்களுடைய துயரங்களையும் காட்ட வேண்டியதுதான்.

ஆனால் உழைப்பினாலும் இடைவிடா முயற்சியினாலும் எப்படி ஏழ்மையையும் அதன் துயரங்களையும் வெல்லலாம் என்று காட்ட வேண்டும்.

கட்டாந்தரையை உழுது பண்படுத்திப் பயிரிட்டுத் தானியம் விளைவிப்பதால் உழைப்பாளி எப்படி நன்மை அடைகிறான், ஊர் எப்படி நன்மை அடைகிறது என்று காட்ட வேண்டும்.

பலர் சேர்ந்து ஒத்துழைத்து வேலை செய்வதினால் எப்படிச் சமூகமும் தேசமும் நன்மை அடைகிறது என்று காட்ட வேண்டும்.

பணக்காரர்களுடைய சோம்பேறி வாழ்வைக் காட்டினால், அதில் அருவருப்பு உண்டாகும்படியான முறையில் காட்ட வேண்டும்.

பணக்காரன் 'வீணில் உண்டு களித்திருக்கும் வாழ்வை நிந்தை செய்து' உதறித் தள்ளி விட்டு உழைப்பாளி யாவதைக் காட்ட வேண்டும்.

வெள்ளித் திரையின் அபரிமிதமான சக்தியை இந்த முறையிலேதான் மற்ற நாடுகளில் உபயோகப் படுத்தி வருகிறார்கள்.

நம் நாட்டு ஸினிமா முதலாளிகளோ ஏழைகளின் துயரங்களைக் காட்டுவதாகச் சொல்லி, உழைப்பைக் கேவலப் படுத்துகிறார்கள்; மிக மிகச் சிறுபான்மையோரான பணக்காரர் மீது துவேஷத்தை உண்டு பண்ணி வளர்க்கிறார்கள்.

இது தற்சமயத்துக்குப் படம் வெற்றிகரமாக ஓடுவதற்குச் சாதனமாக இருக்கலாம். ஆனால் அதிலிருந்து கிளம்பும் துவேஷம் என்னும் பூதமானது பணக்காரர்களுக்குள்ளே வித்தியாசம் எதுவும் பாராட்டாது! ஸினிமா முதலாளிகளைப் பார்த்து "முதலில் உன்னை விழுங்குவேன்!" என்று அந்தப் பூதம் சொல்லக் கூடும்.

ஏழை—பணக்காரன் என்ற வித்தியாசம் இந்நாட்டை விட்டு அவசியம் ஒழிய வேண்டும். அதற்கு வழி உழைப்பைத் தாழ்த்துவதும் துவேஷத்தை வளர்ப்பதும் அன்று. உழைப்பை உயர்த்த வேண்டும்; தொழிலைப் பெருக்க வேண்டும்; கிடைக்கும் பலனை அனைவரும் சரி சமமாகப் பெறுவதற்குச் சட்ட திட்டங்களை இயற்ற வேண்டும்.

இந்த வழியைப் பண்டித ஜவாஹர்லால் நேருவும் அவருடைய சர்க்காரும் பின் பற்றிப் பெரு முயற்சி செய்து வருகிறார்கள். ஸினிமா முதலாளிகள் அம் முயற்சிக்கு உதவி செய்ய வேண்டும்; உதவி செய்யாவிட்டாலும், பாதகம் செய்யாமலாவது இருக்க வேண்டும்.

# இரண்டாவது எலிசபெத்

**பி**ரிட்டிஷ் கிரீடம் என்றால் என்ன சாமான்யமா!

அது விலை மதிக்க முடியாதது. அதில் 2,783 முதல்தர வைரங்கள் பதிக்கப் பட்டிருக்கின்றன; 277 நல் முத்துக்கள் கோக்கப் பட்டிருக்கின்றன; இன்னும் ஏராளமான மரகதங்கள், மாணிக்கங்கள், வைடூரியங்கள் முதலியன வைத்து வெகு நேர்த்தியாக இழைக்கப் பட்டிருக்கின்றன.

இவ்விதம் அழகாகவும் அற்புதமாகவும் ஜாஜ்வல்யமாகவும் பிரகாசிக்கும் மேற்படி கிரீடத்தை முடியில் சூட்டிக் கொள்வோர் எவ்வளவு பாக்கியசாலியாக இருக்க வேண்டும்! அந்தப் பாக்கியம் இப்போது ஆறாம் ஜார்ஜ் மன்னரின் மூத்த புதல்வியான எலிசபெத்துக்குக் கிடைத்திருக்கிறது.

பிரிட்டிஷ் கிரீடத்தின் மதிப்பை எவ்விதம் அளவிட முடியாதோ அது போலவே அதைச் சூட்டிக் கொள்வோரின் அதிகாரத்தை அளவிட முடியாது!

தற்போது இந்தக் கிரீடத்தைத் தரிக்கும் வாய்ப்பைப் பெற்றுள்ள இரண்டாம் எலிசபெத் மகாராணிக்கு பிரிட்டிஷ் அரசியல் திட்டத்தின் கீழ் என்னென்ன அதிகாரங்கள் உண்டு என்பதைக் கேட்போர் பிரமித்து விடுவார்கள்.

எலிசபெத் மகாராணி தமது இஷ்டப்படி பிரிட்டிஷ் இராணுவத்தை அடியோடு கலைத்து விடலாம். அவர் சகல இராணுவ அதிகாரிகளையும் சிவில் அதிகாரிகளையும் டிஸ்மிஸ் செய்யலாம். பிரிட்டிஷ் யுத்தக் கப்பல்களையும் கடற்படைத் தளவாடங்களையும் ஒன்றுகூட பாக்கியின்றி விற்று விடலாம். எந்த நாட்டின் மீதும் யுத்தம் தொடர எலிசபெத் மகாராணிக்கு அதிகாரம் உண்டு. அவர் தமது இஷ்டப்படி எந்தத் தேசத்துடனும் சமாதானம் செய்து கொள்ளலாம். பிரிட்டனில் உள்ள ஆண், பெண் யாவரையும் பிரபுக்களாக்கலாம். சகல குற்றவாளிகளையும் மன்னித்து விடலாம். பிரிட்டிஷ் இளவரசர் இளவரசிகள் எப்போது கல்யாணம் செய்துகொள்ள வேண்டும், யாரைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று திட்டமான கட்டளை பிறப்பிக்கலாம். பிரிட்டிஷ் பார்லிமெண்டையே ஸ்தம்பிக்கும்படி செய்து விடலாம். பிரிட்டிஷ் அரசியலைச் சின்னாபின்னமாக்கி விடலாம்.

பிரிட்டிஷ் பார்லிமெண்டு உலகத்தில் உள்ள பார்லிமெண்டு சபைகளுக்கே திலகமாக விளங்குகிறது என்று பிரிட்டிஷார் பெருமிதம் அடைகிறார்கள்.

அப்படிப்பட்ட பிரிட்டிஷ் பார்லிமெண்டின் உன்னதமான கட்டிடம் கூட மகாராணியின் சொந்த சொத்தாகக் கருதப்படுகிறது.

எல்லையற்ற இவ்வளவு அதிகாரங்களும் உரிமைகளும் பிரிட்டனை ஆட்சி புரியும் மன்னருக்கோ அல்லது மகாராணிக்கோ உண்டு. ஆனால் அவற்றை அவர்கள் உபயோகப் படுத்துவது மட்டும் கிடையாது; உபயோகப் படுத்தலாம் என்று கனவில் நினைப்பதும் கிடையாது.

எல்லா அதிகாரங்களையும் ஜனப் பிரதிநிதிகளான பார்லிமெண்ட் சபைக்கும் மந்திரிகளுக்குமே விட்டிருக்கிறார்கள்.

ஏன்! மன்னரோ, மகாராணியோ இன்னாரைத்தான் மணந்து கொள்ளலாம் என்று கட்டுப் படுத்தும் அதிகாரத்தைக் கூடப் பிரிட்டிஷ் மந்திரிகள் வகிக்கிறார்கள்.

அதற்கு இஷ்டமில்லாவிட்டால், பிரிட்டிஷ் மன்னர் கிரீடத்தைக் கழற்றி வைத்துவிட்டுச் சிங்காதனத்திலிருந்து இறங்க வேண்டியதுதான்!

இவ்விதம் தங்கள் அதிகாரங்களை யெல்லாம் ஜனப் பிரதிநிதிகளுக்கு விட்டுக் கொடுத்து ஜனநாயகத்தை ஒப்புக்கொண்டு நடந்து வருகிறபடியினாலேதான், உலகமெங்கும் முடியரசுகள் தவிடு பொடியாகிவிட்ட இந்த நாளிலுங்கூட பிரிட்டிஷ் அரச வம்சத்தின் பெருமை குன்றாமல் இருந்து வருகிறது.

பிரிட்டிஷ் சரித்திரத்திலே இதற்கு முன்பு ஐந்து ராணிகள் ஆட்சி புரிந்திருக்கிறார்கள். இப்போது பட்டத்துக்கு வந்துள்ள இரண்டாம் எலிசபெத் ஆறாவது மகாராணியாக விளங்குகிறார்.

அரசர்கள் பிரிட்டனை ஆண்ட காலத்திலேவிட முதலாவது எலிசபெத், விக்டோரியா போன்ற மகாராணிகளின் காலத்தில்தான் பிரிட்டன் மிக உன்னதமான நிலையில் இருந்தது.

அந்தப் பரம்பரை வழக்கத்தை அனுசரித்து இரண்டாம் எலிசபெத் மகாராணியின் காலத்திலும் பிரிட்டனின் பெருமை மங்காமல் இருக்கும் என்று எதிர்பார்க்கலாம்.



# பொன்னியின் செல்வன்





## அத்தியாயம் 10

## சூடாமணி விஹாரம்

**பூ**ம்புகார் என்னும் காவிரிப்பட்டினத்தைக் கடல் கொள்ளை கொண்டு போய் விட்டது அல்லவா? அதற்குப் பிறகு சோழ வள நாட்டின் முக்கிய துறைமுகப் பட்டினம் என்ற அந்தஸ்தை நாகைப் பட்டினம் நாளடைவில் அடைந்தது. பொன்னி நதி பாய்ந்து இயற்கை வளம் செறிந்திருந்த சோழ நாட்டுடன் வர்த்தகத் தொடர்பு கொள்ள எத்தனையோ அயல் நாட்டார் ஆவல்கொண்டிருந்தனர். பெரிய பெரிய மரக்கலங்களிலே வர்த்தகப் பண்டங்கள் வந்து இறங்கியபடி இருந்தன. முத்தும் மணியும் வயிரமும் வாசனைத் திரவியங்களும் கப்பல்களில் வந்து இறங்கியதோடு அரபு நாட்டுக் குதிரைகளும் விற்பனைக்காக வந்து இறங்கின.

ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனாரின் காலத்தில் நாகைப் பட்டினம் சிறந்த மணிமாட நகரமாயிருந்தது. அந்த நகரத்தைக் கண்ட நம்பி ஆரூரர்,

**"காண்பினிய மணிமாடம் நிறைந்த நெடு வீதிக்**
**கடல்நாகைக் காரோணம் மேவியிருந்தீரே!"**

என்று வர்ணித்தார். கடல் நாகைக் காரோணத்தில் மேவியிருந்த காயாரோகணப் பெருமானிடம் ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் என்ன பொருள்கள் வேண்டுமென்று கேட்டார் தெரியுமா? மற்ற ஊர்களிலே போலப் பொன்னும் மணியும் ஆடை ஆபரணங்களும் கேட்டதோடு, நாகைப் பட்டினத்திலே ஓர் உயர்ந்த சாதிக் குதிரையும் கேட்டுப் பெற்றுக் கொண்டார்!

**"நம்பிதாமும் அந்நாட்போய் நாகைக் காரோணம் பாடி**
**அம்பொன் மணிப்பூண் நவமணிகள் ஆடை**
**சாந்தம் அடற்பரிமா"**

ஆகியவை பெற்றுக் கொண்டு திருவாரூர் திரும்பிச் சென்றதாகப் பெரிய புராணம் கூறுகிறது.

நாகைப்பட்டினத் துறை முகத்தில் வந்து இறங்கிய அரபு நாட்டுக் குதிரைகளைப் பார்த்ததும் நாயனாருக்கும் குதிரை ஏறிச் சவாரி செய்ய வேண்டும் என்று தோன்றி விட்டது போலும்!

**நா**கைப் பட்டினத்தைப் பற்றிப் புராணம் வர்ணிப்பது ஒருபுறமிருக்க, சரித்திர பூர்வமான கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் அந்நகரத்தைப் பற்றிச் சொல்லியிருக்கின்றன.

**"பல கோயில்களும் சத்திரங்களும் நீர் நிலைகளும் சோலைகளும் மாடமாளிகைகளும் நிறைந்த வீதிகளையுடைய நாகைப்பட்டினம்"** என்று ஆனைமங்கலச் செப்பேடுகள் அந்நகரை வர்ணிக்கின்றன.

அதே ஆனைமங்கலச் செப்பேடுகள் அந்நாளில் நாகைப் பட்டினத்தில் புகழ் பெற்று விளங்கிய சூடாமணி விஹாரம்

என்னும் பௌத்த ஆலயத்தைப் பற்றியும் அதன் வரலாற்றையும் கூறுகின்றன.

* * *

மலாய் நாடு என்று இந்நாளில் நாம் குறிப்பிடும் தீபகற்பம் அக்காலத்தில் ஸ்ரீ விஜய நாடு என்னும் பெயரால் பிரசித்தி பெற்றிருந்தது. அந்த நாட்டில் ஒரு முக்கிய நகரம் கடாரம். அந்த மாநகரைத் தலைநகரமாக வைத்துக் கொண்டு நாலா திசையிலும் பரவியிருந்த மாபெரும் ஸ்ரீ விஜய சாம்ராஜ்யத்தை நெடுங்காலம் ஆண்டு வந்தவர்கள் சைலேந்திர வம்சத்தார். அந்த வம்சத்தில் **மகாரத்துவஜன் சூடாமணி வர்மன்** என்னும் மன்னன் மிகவும் கீர்த்தி பெற்று விளங்கினான். அவ்வரசன் "**இராஜ தந்திரங்களில் நிபுணன்; ஞானத்தில் ஸுர குருவான பிரகஸ்பதியை ஒத்தவன்: அறிவாளிகளான தாமரை மலர்களுக்குச் சூரியன் போன்றவன்; இரவலருக்குக் கற்பகத் தருவாய் விளங்கினான்**" என்று ஆனைமங்கலச் செப்பேடுகள் வியந்து புகழ்ந்து கூறுகின்றன.

அத்தகைய பேரரசனின் மகன் மாற விஜயோத்துங்க வர்மன் என்பவன் தன் தந்தையின் திருநாமம் நின்று நிலவும்படியாக "**மேருமலையை யொத்த சூடாமணி விஹாரத்தை நாகைப்பட்டினத்தில் கட்டினான்**" என்றும் அச் செப்பேடுகள் கூறுகின்றன.

• • •

கடாரத்து அரசனாகிய மாற விஜயோத்துங்கன் நாகைப்பட்டினத்துக்கு வந்து புத்த விஹாரத்தைக் கட்டுவானேன் என்று வாசகர்கள் கேட்கலாம்.

சோழ வள நாட்டுடன் நீடித்த வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்த அயல் நாடுகளில் ஒன்று ஸ்ரீ விஜய நாடு. அந்நாட்டுப் பிரஜைகள் பலர் நாகைப் பட்டினத்துக்கு வந்து நிரந்தரமாகவே குடியேறி யிருந்தனர். வேறு பலர் அடிக்கடி வந்து திரும்பினர். கடாரத்து அரசனும் அவனுடைய குடிகளும் புத்த மதத்தைச் சார்ந்தவர்கள். அவர்கள் புத்தரை வழிபடுவதற்கு வசதியாயிருக்கட்டும் என்றுதான் அம்மன்னன் நாகைப்பட்டினத்தில் சூடாமணி விஹாரத்தைக் கட்டினான். புத்த மதத்தின் தாயகம் பாரத தேசமாயிற்றே என்ற காரணமும் அவன் மனதில் இருந்திருக்கலாம்.

தமிழகத்து மன்னர்கள் எக்காலத்திலும் சமய சமரசத்தில் நம்பிக்கை கொண்டவர்கள். ஆகையால் அவர்கள் நாகைப்பட்டினத்தில் சூடாமணி விஹாரம் கட்டுவதற்கு அநுமதி கொடுத்தார்கள். அநுமதி கொடுத்தது மட்டுமா? அவ்வப்போது அந்தப் புத்தர் கோயிலுக்கு நிவந்தங்களும் இறையிலி நிலங்களும் அளித்து உதவினார்கள். *

விஜயாலய சோழரின் காலத்திலிருந்து சோழ மன்னர்கள் சிவ பக்தியில் திளைத்தவர்களா யிருந்தார்கள். ஆதித்த சோழரும் பராந்தக சோழரும் கண்டராதித்தரும் சைவப் பற்று மிக்கவர்கள். பற்பல சிவாலயத் திருப்பணிகள் செய்வித்தார்கள். எனினும் அவர்கள் பிற மதங்களைத் துவேஷிக்கவில்லை. தங்கள் இராஜ்யத்தில் வாழும் பிரஜைகள் எந்தெந்த மதத்தைச் சேர்ந்தவர்களாயினும் அவர்களையும் அவர்களுடைய மதங்களையும் நடுநிலைமை தவறாமல் பராமரித்தார்கள். சுந்தர சோழ சக்கரவர்த்தி தமது முன்னோர்களைக் காட்டிலும் சில படிகள் முன் சென்றார். புத்தப் பள்ளிகளுக்கு விசேஷ சலுகைகள் அளித்தார். இதனால் சோழ சாம்ராஜ்யத்தில் அச்சமயம் வாழ்ந்திருந்த பௌத்தர்கள் அனைவரும் மிக்க உற்சாகம் கொண்டிருந்தார்கள். இலங்கையில் அருள்மொழி வர்மர் இடிந்துபோன புத்த விஹாரங்களைப் புதுப்பிக்கும்படி ஏற்பாடு செய்தது அவர்களுடைய உற்சாகத்தை மேலும் அதிகமாக்கி யிருந்தது.

அப்படி யெல்லா மிருக்க, இன்று அந்தப் பெயர் பெற்ற சூடாமணி விஹாரத்தில் நேர்ந்த குழப்பத்துக்குக் காரணம் என்ன? பிக்ஷுக்கள் நிலை கொள்ளாமல் அங்குமிங்கும் பரபரப்பாக ஏன் ஓடிக் கொண்டிருக்கிறார்கள்? சூடாமணி

---

* இந்தக் கதை நடந்த காலத்திற்குப் பிற்காலத்தில் இராஜ ராஜ சோழன் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்கு ஆனைமங்கலம் கிராமத்தையும் அதைச் சார்ந்த பல ஊர்களையும் முற்றூட்டாக அதாவது எந்த விதமான வரியும் விதிக்கப்படாத இறையிலி நிலமாகத் தானம் அளித்தான். இந்த நில தானத்தை இராஜராஜனுடைய குமாரன், சரித்திரப் புகழ்பெற்ற இராஜேந்திர சோழன்,—செப்பேடுகளில் எழுதுவித்து உறுதிப்படுத்தினான். இவைதான் ஆனைமங்கலச் செப்பேடுகள் என்று கூறப்படுகின்றன. மொத்தம் இருபத்தொரு செப்பேட்டு இதழ்கள். ஒவ்வொன்று 14 அங்குல நீளமும் 5 அங்குல அகலமும் உள்ளவையாய், ஒரு பெரிய செப்பு வளையத்தில் கோக்கப்பட்டிருக்கின்றன. இச்செப்பேடுகள் சமீபகாலத்தில் கப்பல் ஏறிக் கடல்கடந்து சென்று ஐரோப்பாவில் ஹாலந்து தேசத்தில் உள்ள லெயிடன் என்னும் நகரத்தின் காட்சிச் சாலையில் வைக்கப்பட்டிருக்கின்றன! ஆகையினால் இச்செப்பேடுகளை 'லெயிடன் சாஸனம்' என்றும் சில சரித்திர ஆராய்ச்சியாளர் குறிப்பிடுவதுண்டு.

விஹாரத்தின் வாசற் புறத்தில் என்ன அவ்வளவு இரைச்சலும் கூக்குரலும்?—நல்லது; நாமும் சேந்தன் அமுதனைப் பின்பற்றிச் சென்று பார்ப்போம்.

*  *  *

சேந்தன் அமுதனும் மற்ற இருவரும் கால்வாய் வழியாகப் படகைச் செலுத்திக்கொண்டு சூடாமணி விஹாரத்தின் உட்பகுதிக்கே வந்துவிட்டதாகச் சொன்னோம். அங்கே ஒருவரையும் காணாமையால் சேந்தன் அமுதன் தட்டுத்தடுமாறி வழி தேடிக்கொண்டு விஹாரத்தின் வாசற் பக்கம் போய்ச் சேர்ந்தான். அங்கேதான் பொதுமக்கள் வந்து வழிபடுவதற்குரிய புத்தர் பெருமானின் சைத்யம் என்னும் கோயில் இருந்தது. பக்தர்கள் பலர் அந்தக் காலை நேரத்தில் தாமரை மலர்களும் செண்பகப் பூக்களும் மற்ற பூஜாத் திரவியங்களும் நிறைந்த தட்டுக்களை ஏந்திக்கொண்டு வந்திருந்தார்கள். ஆனால் வந்த காரியத்தை அவர்கள் மறந்து விட்டதாகத் தோன்றியது. சைத்யத்தில் ஏறுவதற்குரிய படிகளில் பிக்ஷுக்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களை நோக்கிக் கீழே நின்றவன் ஒருவன் ஏதோ சொல்லிக்கொண்டிருப்பதைச் சேந்தன் அமுதன் கண்டான். பிக்ஷுக்கள் சிலருடைய கண்களில் கண்ணீர் ததும்பி நிற்பதையும் பார்த்தான். கீழே நின்ற பக்தர்களில் பலர் வழக்கப்படி "சாது! சாது!" என்று கோஷிப்பதற்குப் பதிலாக, "ஆஹா!" "அடடா!" "ஐயோ!" என்று அங்கலாய்த்துக் கொண்டிருப்பதையும் கவனித்தான்.

அருகில் நெருங்கிச் சென்று சிறிது நேரம் கேட்ட பின்னர் விஷயம் இன்னது என்று தெரிந்தது. பிக்ஷுக்களிடம் பேசிக் கொண்டிருந்தவன் பார்த்திபேந்திரனுடைய கப்பலிலே இருந்த மாலுமிகளில் ஒருவன். கப்பல் முதல் நாள் இரவு நாகைப் பட்டினத்துக்கு வந்து விட்டது. மாலுமிகள் கரையில் இறங்கியதுமே இளவரசரைக் கடல் கொண்டு விட்டது என்ற செய்தியைச் சிலரிடம் சொல்ல, அது நகரமெல்லாம் பரவி விட்டது. அச்செய்தி உண்மைதானா என்று அறிய அதிகாலையில் அம்மாலுமிகளில் ஒருவனைச் சூடாமணி விஹாரத்தின் பிரதம பிக்ஷு அழைத்து வரச் செய்தார். அவன் தான் அறிந்ததை அறிந்தபடி கூறினான். "சுழற் காற்று அடித்தபோது இளவரசர் கடலிலே குதித்தவர் திரும்பி வரவேயில்லை" என்று துயரக் குரலிலே சொன்னான்.

அப்போது அக்கூட்டத்திலே விம்மி அழும் குரல்கள் பல எழுந்தன.

பிரதம பிக்ஷுவின் கண்களிலிருந்து கண்ணீர் அருவியாகப் பெருகித் தாரை தாரையாக வழிந்தது.

அவர் குனிந்த தலை நிமிராமல் படிகளில் ஏறிச் சென்று சைத்யத்தைத் தாண்டி விஹாரத்துக்குள் பிரவேசித்தார். மற்ற பிக்ஷுக்களும் அவரைத் தொடர்ந்து சென்றார்கள். சேந்தன் அமுதனும் அவர்களோடு வந்ததை ஒருவரும் கவனிக்கவில்லை.

பிரதம பிக்ஷு மற்றவர்களைப் பார்த்துச் சொன்னார்:—"புத்த பகவானின் கருணை இப்படியா இருந்தது? பற்பல மனக் கோட்டைகள் கட்டிக் கொண்டிருந்தேனே? சக்கரவர்த்தியைப் பார்க்க சமீபத்திலே தஞ்சாவூருக்குப் போயிருந்தேன், பாருங்கள்! அச்சமயம் இலங்கையில் அருள்மொழி வர்மரின் அற்புதச் செயல்களைப் பற்றிக் கூறினேன். அதையெல்லாம் இளைய பிராட்டி குந்தவை தேவியும் கேட்டுக் கொண்டிருந்தார். பிறகு என்னைத் தனியாக வரவழைத்து இந்த விஹாரத்தையொட்டி ஆதுரசாலை ஒன்று ஏற்படுத்த வேண்டும் என்றும் அதற்குத் தேவையான நிபந்தங்கள் அளிப்பதாகவும் கூறினார். அது மட்டுமா? 'ஆச்சாரியரே! நாட்டில் பலவாறு பேச்சுக்கள் நடந்து கொண்டிருப்பதைக் கேட்டிருப்பீர்கள். ஒரு வேளை இளவரசர் சூடாமணி விஹாரத்தில் சில நாள் விருந்தாளியாக இருக்கும்படி நேரும். அவரை வைத்துப் பாதுகாக்க முடியுமா?' என்று குந்தவைப் பிராட்டி கேட்டார். 'தேவி! அத்தகைய பேறு எங்களுக்குக் கிடைத்தால் கண்ணை இமை காப்பது போல் வைத்துப் பாதுகாப்போம்' என்று கூறினேன். என்ன பயன்! இளவரசரா கடலில் முழுகினார்? இந்த நாட்டிலுள்ள நல்லவர்களின் மனோரதமெல்லாம் முழுகி விட்டது! சோழ சாம்ராஜ்யமே முழுகி விட்டது! சமுத்திர ராஜன் இவ்வளவு பெருங் கொடுமையைச் செய்ய எப்படித் துணிந்தான்? அக்கொடியவனைக் கேட்பார் இல்லையா?" என்று கதறினார்.

மற்ற பிக்ஷுக்கள் அனைவரும் மௌனமாகக் கண்ணீர் பெருக்கினார்கள்.

தலைமைப் பிக்ஷு பேசி நிறுத்தியதும் சிறிது நேரம் அங்கே மௌனம் குடிகொண்டிருந்தது.

சேந்தன் அமுதன் அதுதான் சமயம் என்று புத்த பிக்ஷுக்களிடையே புகுந்து ஆச்சாரியரை அணுக யத்தனித்தான். உடனே அவனைப் பலர் தடுத்தார்கள். "இவன் யார்? இங்கே எப்படி வந்தான்?" என்று ஒருவரை யொருவர் கேட்டுக் கொண்டார்கள்.

"ஐயா! அடியேன் பெயர் சேந்தன் அமுதன். தஞ்சையைச் சேர்ந்தவன். உங்கள் தலைவரிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டும்!" என்றான்.

"சொல், சொல்?" என்றார்கள் பலர்.

அவனுடைய தயக்கத்தைப் பார்த்து விட்டு ஆச்சாரியர், "இவர்களுக்குத் தெரியக் கூடாத ரகசியம் ஒன்றுமில்லை; சொல்!" என்றார்.

"ஐயா! நோயாளி ஒருவரை அழைத்து வந்திருக்கிறேன்!"

"அது யார் நோயாளி? என்ன நோய்? எங்கே விட்டிருக்கிறாய்?"

"விஹாரத்தின் நடுமுற்றத்தில் விட்டிருக்கிறேன்..."

"எப்படி அங்கே வந்தாய்?"

"கால்வாய் வழியாக நோயாளியைப் படகில் கொண்டு வந்தேன். நடுக்கும் குளிர்க் காய்ச்சல். தாங்கள் உடனே..."

"பகவானே! நடுக்கும் சுரம் தொற்று நோய் ஆயிற்றே! இங்கே ஏன் அந்த நோயாளியை அழைத்து வந்தாய்? அதிலும் நல்ல சமயம் பார்த்து!......"

"ஆச்சாரியா! அசோக சக்கரவர்த்தி புத்த மதத்தினர் என்று இதுகாறும் நினைத்திருந்தேன். இப்போது இல்லை என்று தெரிகிறது......"

"அது ஏன் அப்படிக் கூறுகிறாய்?"

"அசோக ஸ்தம்பம் ஒன்றை நான் காஞ்சிக்கு அருகில் பார்த்தேன். அதில் நோயாளிக்குச் சிகிச்சை செய்வதை முதன்மையான தர்மமாகச் சொல்லியிருக்கிறது. நீங்களோ இப்படி விரட்டியடிக்கிறீர்கள்!" என்றான் அமுதன்.



ஆச்சாரிய பிக்ஷு மற்றவர்களைப் பார்த்து, "கொஞ்சம் பொறுங்கள்; நான் போய்ப் பார்த்து விட்டு வந்து சொல்லுகிறேன்" என்று கூறி விட்டு "வா! அப்பனே!" என்று சேந்தன் அமுதனை அழைத்துக்கொண்டு சென்றார்.

**வி**ஹாரத்தின் நடு முற்றத்தில் கால்வாய்க்கு அருகில் ஒரு யுவனும் யுவதியும் இருப்பதைப் பார்த்துப் பிக்ஷு திடுக்கிட்டார். "இது என்ன காரியம் செய்யத் துணிந்தீர்கள்? இந்த விஹாரத்துக்குள் ஸ்திரீகளே வரக்கூடாதே! பிக்ஷுணிகளுக்குக் கூட வேறு தனி மடம் அல்லவா கட்டியிருக்கிறது?"

அருகில் போய் அந்த இளைஞன் யார் என்பதை உற்றுப் பார்த்ததும் பிக்ஷு திகைத்துப் போனார், என்று சொன்னால் போதாது! வியப்பினாலும் களிப்பினாலும் அவரால் சிறிது நேரம் பேச முடியவில்லை.

சந்தேக நிவர்த்திக்காக, "இளவரசர் அருள்மொழி வர்மர்தானா?" என்று சேந்தன் அமுதனைக் கேட்டார்.

இது இளவரசர் காதில் விழுந்தது. "இல்லை, ஆச்சாரியரே! இல்லை! நான் இளவரசனுமில்லை, ஒன்றுமில்லை. இந்தப் பெண்ணும் இந்தப் பிள்ளையுமாகச் சேர்ந்து என்னைப் பைத்தியமாக அடிக்கப் பார்க்கிறார்கள். நான் ஒரு ஓடக்காரன். சற்று முன் இந்தப் பெண்ணைப் பார்த்து 'பெண்ணே! என்னை மணம் புரிந்து கொள்வாயா? இருவரும் படகில் ஏறித் தூர தேசங்களுக்குப் போகலாம்' என்றேன். இவள் ஏதேதோ பிதற்றினாள். நான் உலகத்தை ஒரு குடை நிழலில் ஆளப் பிறந்தவனாம்! ஏழை வலைஞர் குலப் பெண்ணாகிய இவள் என்னை மணந்துகொள்ள மாட்டாளாம். நான் சுகமாயிருந்தால் இவளுக்குப் போதுமாம். வருங்காலத்தில் என்னுடைய மகத்தான வெற்றிகளைக் கேட்டு இவள் மகிழப் போகிறாளாம். எப்படியிருக்கிறது கதை! உண்மையில் எனக்குச் சித்தப் பிரமையா? இவர்களுக்கா?"

சேந்தன் அமுதன் ஆச்சாரிய பிக்ஷுவின் காதோடு ஏதோ கூறினான். அதற்கு முன்னாலேயே இளவரசர் சுர



வேகத்தினால் நினைவிழந்த நிலையில் பேசுகிறார் என்பதைப் பிக்ஷு உணர்ந்திருந்தார். குந்தவைதேவி தம்மிடம் இளவரசருக்கு அடைக்கலம் தரும்படி கேட்டிருந்ததும் அவருக்கு நினைவு வந்தது.

மற்ற பிக்ஷுக்களைப் பார்த்து அவர், "இந்தப் பிள்ளைக்கு விஷ சுரம்தான் வந்திருக்கிறது. இவனை வெளியில் அனுப்பினால் இன்னும் ஆயிரக்கணக்கானவர்களுக்கு வந்துவிடும். இலங்கையில் எத்தனையோ ஆயிரம் பேர் இந்தச் சுரத்தினால் இறந்து போனார்கள். ஆகையால் இந்த இளைஞனை என் அறைக்கு அழைத்துப் போய் நானே பணிவிடையும் சிகிச்சையும் செய்யப் போகிறேன். இடையில் சுர வேகத்தினால் இவன் ஏதாவது பிதற்றினால் அதை நீங்கள் பொருட்படுத்த வேண்டாம்!" என்றார்.

உடனே பிக்ஷு இளவரசர் அருகிலே நெருங்கி ஒரு கையினால் அவரை அணைத்துத் தூக்கினார். சேந்தன் அமுதன் இன்னொரு பக்கத்தில் இளவரசரைப் பிடித்துக் கொண்டு உதவினான். எல்லாரும் படிகளில் ஏறிச் சென்றார்கள்.

இதோ, இன்னும் சில விநாடி நேரத்தில் படிக்கட்டு முழுதும் ஏறிவிடுவார்கள். கதவைத் திறந்துகொண்டு உள்ளே பிரவேசிப்பார்கள். பிறகு கதவு சாத்தியாகிவிடும். சாத்தினால் சாத்தியதுதான். அப்புறம் அவரைப் பார்க்க முடியாது.

பூங்குழலி எதிர்பார்த்தபடியே நடந்தது. மாடிப்படி ஏறியதும் கதவு திறந்தது. சேந்தன் அமுதனை மட்டும் வெளியில் நிறுத்தித் தலைமைப் பிக்ஷு ஏதோ கூறினார். பிறகு திறந்த கதவு வழியாக எல்லாரும் பிரவேசித்தார்கள்.

கதவு படார் என்று சாத்திக் கொண்டது. அது பூங்குழலியின் இதயமாகிற கதவையே அடைப்பது போலிருந்தது.

இனி இந்தப் பிறவியில் இளவரசரைப் பார்க்கலாம் என்ற நிச்சயமில்லை. அடுத்த ஜன்மத்திலாவது அத்தகைய பாக்கியம் தனக்குக் கிடைக்குமா?— இவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டே இளவரசர் மறைவதைப் பார்த்துக் கொண்டு நின்றாள் பூங்குழலி.

## அத்தியாயம் 11

# கொல்லுப் பட்டறை

**வ**ந்தியத்தேவன் குதிரையைத் தட்டிவிட்டான். பழையாறையைக் குறியாக வைத்துக் கொண்டு போய்க் கொண்டிருந்தான். பழையாறையிலிருந்து வந்த பாதை ஒருவாறு ஞாபகம் இருந்தபடியால் யாரையும் வழிகூடக் கேளாமல் உத்தேசமாகத் திசை பார்த்துக்கொண்டு சென்றான். முதலில் கொஞ்ச தூரம் காட்டுப் பாதை வழியே சென்றான். குதிரை இதனால் மிகவும் கஷ்டப்பட்டுப் போனதை அறிந்தான். வல்லவரையனுக்கும் களைப்பு அதிகமாகவே இருந்தது. அவன் சிறிது நேரமாவது அயர்ந்து தூங்கிப் பல தினங்கள் ஆகிவிட்டன. அவ்வப்போது கண்ணை மூடிக் கொண்டு ஆடி விழுந்ததைத் தவிர நிம்மதியாக ஓரிடத்தில் படுத்துத் தூங்கினோம் என்பது கிடையாது. பழையாறைக்குப் போய் இளவரசியிடம் செய்தியைச் சொல்லி விட்டால் அப்புறம் அவனுடைய பொறுப்புத் தீர்ந்தது. நிம்மதியாகத் தூங்கலாம். வெகு நேரம் தூங்கலாம்; ஏன், சென்றுபோன தினங்களுக்கும் சேர்த்து நாள் கணக்கில் தூங்க வேண்டும் என்று திட்டமிட்டான்.

இளவரசி குந்தவையிடம் "தாங்கள் கூறிய பணியை நிறைவேற்றிவிட்டேன்" என்று சொல்லும்போது தனக்கு ஏற்படக் கூடிய மகிழ்ச்சியை அவன் எண்ணிப் பார்த்தான். தேவியின் முகம் அதைக் கேட்டு எவ்வண்ணம் மலர்ந்து பொலியும் என்பதையும் நினைத்தான். அந்த நினைவு அவனுக்கு ரோமாஞ்சனம் உண்டு பண்ணியது.

இன்னொரு விஷயமும் அவனுக்கு நினைவு வந்தது. காஞ்சியிலிருந்து புறப்பட்டதிலிருந்து எத்தனை பொய்யும் புனைசுருட்டும் அவன் சொல்லியிருக்கிறான்? அவசியம் நேரிட்டதனால்தான் கூறினான். ஆயினும் அதையெல்லாம் நினைக்கும்போது அவனுக்கு உள்ளமும் உடலும் குன்றிப் போயின. இளவரசர் அருள்மொழிவர்மரோடு சிறிது காலம் பழகியதனால் அவனுடைய மனப்போக்கே மாறிப் போயிருந்தது. இராஜரீக காரியங்களில் ஈடுபடுகிறவர்களுக்குச் சாணக்கிய தந்திரங்கள் தெரிந்திருக்க வேண்டும் என்று அவன் கருதியிருந்தான். அத்தகைய இராஜரீக தந்திரங்களின் மூலமாக அவனுடைய முன்னோர்கள் இழந்து

விட்ட ராஜ்யத்தைத் திரும்பிப் பெற லாம் என்ற ஆசையும் அவனுக்கு இருந்தது. அந்த எண்ணமெல்லாம் இப்போது மாறிவிட்டது. இளவரசர் அருள்மொழி வர்மரின் நேர்மையையும் சத்திய தீரத்தையும் பார்த்த பிறகு அவனுக்குப் பொய் புனைசுருட்டுகளில் வெறுப்பே உண்டாகி விட்டது. அவரைக் காப்பாற்றுவதாக எண்ணிக் கொண்டு மந்திரவாதியின் காது கேட்க நேற்றிரவு அவன் கூறிய பொய்யையும் எண்ணிக் கொண்டான். அதனால் ஏதாவது விபரீதம் நேராமல் இருக்க வேண்டுமே என்று நினைத்தபோது அவன் நெஞ்சு துணுக்குற்றது. அதை வேறு யாராவது கேட்டிருந்தால், ஒரு வேளை குந்தவை தேவியிடமே யாரேனும் சொல்லி வைத்தால்?— இளைய பிராட்டி நம்பிவிட மாட்டாள்! ஆயினும் எவ்வளவு பெரிய விபத்து?

இனி, இவ்வாறெல்லாம் இல்லாததைப் புனைந்து கூறுவதையே விட்டுவிட வேண்டும். உண்மையைச் சொல்ல வேண்டும்; அதனால் கஷ்டம் வந்தால் சமாளிக்க வேண்டும். அந்த வீர வைஷ்ணவனைப் போன்றவர்களும் ரவிதாசனைப் போன்றவர்களும் ஒற்றர் வேலை செய்யட்டும். நமக்கு என்னத்திற்கு அந்தத் தொல்லை? வாளின் துணைகொண்டு நமக்குக் கிடைக்கும் வெற்றி கிடைக்கட்டும். அதுவே போதும். அதனால் உயிரை இழந்தாலும் சரிதான். தந்திர மந்திரங்களையெல்லாம் இனி விட்டுவிட வேண்டியதுதான்.

இவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டே சென்றதில் குதிரையின் வேகம் தடைப்பட்டதை அவன் சிறிதுநேரம் கவனிக்கவில்லை. ஏன், குதிரை மீதிருந்து சிந்தனை செய்து கொண்டே போனதில் கொஞ்சம் கண்ணயர்ந்தும் விட்டான். குதிரை ஓரிடத்தில் தடுமாறிக் குனிந்தபோது அவன் திடுக்கிட்டு விழித்துக் கொண்டான். குதிரை தனது முன்னங்கால் ஒன்றைத் தரையில் ஊன்றி வைக்க முடியாமல் தத்தளித்தது தெரிந்தது. உடனே கீழே இறங்கினான். குதிரையைத் தட்டிக் கொடுத்து விட்டு ஊனமடைந்ததாகத் தோன்றிய முன்னங்காலை எடுத்துப் பார்த்தான். அதன் அடிப்புறத்தில் ஒரு சிறிய கூரிய கல் பொத்துக் கொண்டிருந்தது. அதை லாகவமாக எடுத்து எறிந்தான். நல்ல வேளை; பெரிய காயம் ஒன்றும் படவில்லை. மறுபடியும் குதிரையைத் தட்டிக் கொடுத்து உற்சாகப்படுத்திவிட்டு அதன் முதுகின் மீது ஏறிக் கொண்டான். கப்பலில் அரபு நாட்டார் பேசிக் கொண்டது நினைவு வந்தது.

**"தமிழ் நாட்டார் கோரமானவர்கள்: அறிவும் இல்லாதவர்கள்! குதிரைகளின் குளம்புக்குக் கவசம் அடிக்காமல் வெறுங்காலிலேயே ஓடச் செய்கிறார்கள். அப்படி ஓடும் குதிரைகள் எத்தனை நாள் உயிரோடிருக்கும்?"**

இதை நினைத்துக்கொண்டே வந்தியத்தேவன் குதிரையை ஓட்டினான். வீரர்கள் போர்க்களத்துக்குப் போகும்போது மார்பிலே கவசம் தரிப்பார்கள். குதிரைக் குளம்புக்கு இரும்புக் கவசம் போடுவது என்பது அதிசயமான காரியந்தான். ஆயினும் அம்மாதிரி வேறு தேசங்களில் செய்வதுண்டு என்று முன்னமே கேள்விப் பட்டிருந்தான். முதன் முதலாக எதிர்ப்படும் கொல்லுப் பட்டறையில் இதைப்பற்றிக் கேட்க வேண்டியதுதான். முடியுமானால் இந்தக் குதிரையின் குளம்புக்கே கவசம் அடித்துப் பார்க்கலாம். இல்லாவிடில், இது பழையாறை வரை போய்ச் சேர்வதே கடினம். நடுவில் இது விழுந்து விட்டால் வேறு குதிரை சம்பாதிக்க வேண்டும். எப்படிச் சம்பாதிப்பது? யாரிடமாவது திருடத்தான் வேண்டும்! சீச்சீ! அந்த நினைவே வந்தியத்தேவனுக்கு வெட்கத்தை உண்டாக்கியது.

காட்டுப் பாதையிலிருந்து உத்தேசமாகக் குதிரையைத் திசை மாற்றி விட்டுக் கொண்டு போய் வந்தியத்தேவன் இராஜபாட்டையை அடைந்தான். வந்தது வரட்டும்; இனிமேல் இராஜபாட்டை வழியாகத்தான் போக வேண்டும். தன்னைத் தெரிந்தவர்கள் யாரும் இந்தப் பக்கத்தில் இருக்க முடியாது. பழுவேட்டரையர் பரிவாரங்கள் பின்னாலேதான் வரும். மந்திரவாதியும் அப்படித்தான். ஆகையால் அபாயம் ஒன்றுமில்லை. மேலும், இராஜபாட்டையோடு போனால் கொல்லுப் பட்டறை எங்கேயாவது இருக்கும். அதில் குதிரைக் குளம்புக்கு இரும்புக் கவசம் போட முடியுமா என்று பார்க்கலாம்.

வந்தியத்தேவன் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. சிறிது தூரம் சென்றதும் ஒரு கிராமம் தென்பட்டது. கிராமத்தில் ஏதோ ஒருவிதக் கிளர்ச்சி ஏற்பட்டிருந்ததாகத் தோன்றியது. ஒரு பக்கத்தில் வீதிகளிலும் வீடுகளிலும் தோரணங்கள் கட்டி அலங்கரித்திருந்தார்கள். ஒரு வேளை பெரிய பழுவேட்டரையர் இந்தப் பக்கமாய் வரப்போகிறார் என்று அறிந்து இப்படி ஊர் அலங்காரம் செய்திருக்கலாம். பழுவேட்டரையரும் அவர் பரிவார

மும் வருவதற்குள் தான் வெகு தூரம் போய் விடலாம் என்பது நிச்சயம்.

மற்றொரு பக்கத்தில் கிராமத்து ஜனங்கள்,—ஸ்திரீகள் புருஷர்கள்வயோதிகர்கள் சிறுவர் சிறுமிகள் அனைவரும்,—அங்கங்கே கும்பல் கும்பலாக நின்று கவலையுடன் பேசிக்கொண்டிருந்தார்கள். விஷயம் என்னவா யிருக்குமென்று அவனால் ஊகிக்க முடியவில்லை. அவர்களில் சிலர் குதிரையில் வருகிறவனைக் கண்டதும் அவனை நிறுத்தும் எண்ணத்தோடு அருகில் வந்தார்கள். வந்தியத் தேவன் அதற்கு இடங்கொடாமல் குதிரையைத் தட்டி விட்டுக்கொண்டு மேலேபோனான். வீண் வம்புகளில் அகப்பட்டுக் கொள்ள அவன் இஷ்டப்படவில்லை.

கிராமத்தைத் தாண்டியதும் சாலை ஓரத்தில் கொல்லுப் பட்டறை ஒன்று இருக்கக் கண்டான். அதைக் கடந்து மேலே செல்ல அவனுக்கு மனம் வரவில்லை. குதிரையை நிறுத்தி விட்டுப் பட்டறைக்குள் சென்றான்.

பட்டறைக்குள் கொல்லன் ஒருவன் வேலை செய்து கொண்டிருக்கக் கண்டான். ஒரு சிறுவன் துருத்தி ஊதிக் கொண்டிருந்தான். வந்தியத் தேவன் உள்ளே பிரவேசித்த அதே சமயத்தில் இன்னொரு மனிதன் பின்பக்கமாக மறைந்ததாகவும் அவனுக்குத் தோன்றியது. ஆனால் இதிலெல்லாம் அவன் கவனம் செல்லவில்லை. கொல்லன் கையில் வைத்துக் கொண்டிருந்த வாள் அவனுடைய கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்ந்தது. அது ஓர் அபூர்வமான வாள்; பட்டறையில் வைத்துக் கொல்லன் அதைச் செப்பனிட்டுக் கொண்டிருந்ததாகத் தோன்றியது. அதன் ஒரு பகுதி பளபள வென்று வெள்ளியைப் போல் பிரகாசித்தது. இன்னொரு பகுதி நெருப்பிலிருந்து அப்போதுதான் எடுக்கப்பட்டிருந்தபடியால் தங்க நிறச் செந்தழல் பிழம்பைப் போல் ஜொலித்தது.

"வாள் என்றால், இது வல்லவா வாள்!" என்று வந்தியத்தேவன் தன் மனதிற்குள் எண்ணி வியந்தான்.

---

## அவர்களின் போக்கு!




சென்னைச் சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் சுயேச்சை அங்கத்தினர்கள் தனிக் கட்சி அமைத்துக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் தங்களுக்குள்ளாவது நீடித்து ஒற்றுமையா யிருப்பார்களா?

# பஜ கோவிந்தம்





**27**

மெய்யறிவில்லையேல் துயரம் நிறைந்த இந்த உலக வாழ்க்கையே நரகமாகும். இம்மையே நரகம்போல் துன்பம் தரும். ஆன்ம ஞானம் இந்த வாழ்க்கையின் கவலைகளையும் துக்கங்களையும் பொறுத்துக் கொள்ள வேண்டிய சக்தியைத் தரும். ஆன்ம ஞானத்தை அடைவது எப்படி? என்று முந்திய பாட்டின் மேல் விளக்கப்பட்டது.

> பாடுவாய் ஸ்ரீநாமம் ஓதுவாய் கண்ணனின் [கீதை
> தேடுவாய் ஈசனுருவம் இடைவிடா [பாவனையால்
> நல்லோர் மாட்டிலே மனத்தை நிறுத்து
> செல்வம் உண்டேல் ஏழைக்கீந்து
> சுருக்கமாய்ச் சொன்னேன், பெருக்குவதேன்.

⁂

**கேயம் கீதா நாம ஸஹஸ்ரம்**
**த்யேயம் ஸ்ரீபதிரூப மஜஸ்ரம்**
**நேயம் ஸஜ்ஜன ஸங்கே சித்தம்**
**தேயம் தீன ஜனாய வித்தம்**

"ஓயாதேயுள்குவார் உள்ளிருக்கும் உள்ளானை, மாநிருக்கும் பாதியனை" என்று மாணிக்கவாசகர் அம்மானைப் பாட்டு பாடினார். "த்யேயம் ஸ்ரீபதி ரூபம் அஜஸ்ரம் — ஓயாது பாவனை செய் லக்ஷ்மீபதியை"—என்றார் சங்கரர். தாயான தத்துவன், உமையொரு கூறன், லக்ஷ்மீகாந்தன், ஸ்ரீபதி—இவையனைத்தும் ஒரு பொருளையே உணர்த்தும் ஈசனுக்குப் பக்தர்களிட்ட திருநாமங்கள்: சிவன் வேறு, விஷ்ணு வேறு, உமை வேறு, லக்ஷ்மி வேறு என்று மோகத்திலும், கோபத்திலும் அலையாதீர்கள்.

---

गेयम् गीतानामसहस्रम्
ध्येयम् श्रीपतिरूपमजस्रम् ।
नेयम् सज्जनसङ्गेचित्तम्
देयम् दीनजनाय च वित्तम् ॥

உருவத்தைப் பாவித்து உருகுவதே கடவுளைத் தேடும் முயற்சி. உண்மை அன்பின் அடையாளம் இடைவிடா பாவனையாகும்.

உன் சித்தம் அழுக்கைத் தேடச் செல்லும். அப்போது நல்லோர்கள், கூட்டத்தை நோக்கிச் செல் என்கிறார். உடலுடன் சென்றாலும் சரி, மனத்தை அவர் மாட்டுச் செலுத்தினாலும் சரி, அழுக்கினின்று தப்புவாய்.

செல்வம் உண்டேல் அதன் உண்மைப் பயனை யறிந்து செலவு செய் என்கிறார். தீனர்களுக்குக் கொடுத்துப் பயன்படுத்து என்கிறார். ஏழைக்குக் கொடுத்துத் துயரத்தைத் துடைப்பதில் உண்டாகும் மகிழ்ச்சியே செல்வத்தினால் உண்டாகும் மிகப் பெரிய மகிழ்ச்சி. பணத்தைக் கடையில் செலவழித்து அதனாலுண்டாகும் வேறு திருப்திகள் ஏழைக்கு உதவியதால் உண்டாகும் மகிழ்ச்சிக்கு ஈடாகமாட்டா. சங்கரர் பாடிய பஜ கோவிந்தம் இல்லறம் நடத்தும் மக்களுக்குப் பாடியது என்பதை இந்தப் பாட்டு காட்டுகிறது. "தேயம் தீன ஜனாய ச வித்தம்"—"பொருளை ஏழைகளுக்குக் கொடுத்து உதவு" என்பது துறவிகளுக்கல்ல, அனைவருக்கும் சொன்னது. இத்தப் பாட்டு வாழும் வழியை முழுதும் சுருக்கமாகச் சொல்லி விட்டது.

★

பகவத் கீதையைப் படி, பகவத்கீதையைப் பாடு என்றார் சங்கரர். கூடவே பகவானுடைய ஆயிர நாமங்களைப் பாடு என்றார். இந்த இரண்டையும் சேர்த்து உபதேசத்தின் பொருளை உணர வேண்டும்.

பகவானுடைய திருநாமங்களைப் பாட வேண்டுமானால் உள்ளத்தில் ஈசுவர பக்தி இருக்க வேண்டும். கொஞ்சம் இருந்தாலும் அது வரவரப் பெரிதாக வளரும். ஒரு நூலைப் படித்தால் பக்தியோடு படிக்க வேண்டும். பக்தி இல்லாவிட்டால் நூலின் பொருளை அறிய முடியாது. கோயிலுக்குள் செல்லும் போது செருப்பை வெளியே வைத்து உள்ளே போகவேண்டும் அல்லவா? அதுபோல் பெரியோர்கள் எழுதிய சாஸ்திரங்களைப் படிக்க ஆரம்பிக்கும்போது

குற்றம் பார்க்கும் இயல்பை ஒழித்துக் கொண்டு பக்தியுடன் ஆரம்பிக்க வேண்டும். பக்தியுடன் கீதையைப் படித்தவர்கள் அதில் பெரும் பொருள் காண்பார்கள். பக்தியில்லாத ஆராய்ச்சிப் படிப்புக்காரர்கள் அதில் கலவரமும், குழப்பமும், சொன்னதையே சொல்லும் எழுத்து நடைக் குற்றமுமே காண்பார்கள். படித்துவிட்டேன், நான் ஒரு பண்டிதனாய்விட்டேன் என்கிற கர்வம் உண்டாகாது படிக்கும்போது பக்தியோடு படித்தால்.

சுருக்கமாக கீதையின் உபதேசம் என்னவென்பதைச் சொன்னால் பஜகோவிந்தம் பாட்டின் முழுப் பொருளும் விளங்கும். கீதை முதல் பாகத்தில் உடலின் மோகத்தை பகவான் கீதாசாரியன் விளக்குகிறான். உடலும் உயிரும் கலந்து நிற்பதால் அந்நிலையில் 'நான்' என்னும் ரகசியப் பொருள் என்ன என்பது நமக்கு விளங்குவதில்லை. உடலும் தானும் ஒன்றே என்று மனிதன் நினைக்கிறான். மகிழ்ச்சியும் திருப்தியும் உண்டு களிப்பதிலேதான் என்று எண்ணுகிறோம், இது தவறு என்பது கீதையின் முதல் உபதேசம். புலன் வழியில் அடையும் மகிழ்ச்சிக்கு முடிவு வெகு சீக்கிரம். அது அநேகமாக துக்கத்தில் முடியும். திருப்தி என்பது எப்போதுமே கிடையாது. இதை உணர்ந்து கொண்டு புலன் வழி உண்டாகும் மகிழ்ச்சிகளைப் பெரிதாக நினைக்காமல் சித்தத்தில் சமநிலையை அடைய முயல்வாயாக, அதுவே உண்மை ஆனந்தம் என்று முதலில் கண்ணன் உபதேசம். உடலானது மனிதன் உடுத்தும் துணியைப் போன்றது. அது கிழிந்தும் நைந்தும் போனால் வேறு உடை உடுத்துவது போல் உயிரானது ஒரு உடல் அழிந்ததும் வேறு உடலில் புகும். மரணம் என்பது ஆன்மாவின் முடிவல்ல. உடுத்தும் துணியைப் போல் உடலை மதிப்பாய். 'நான்' என்று நாம் பேசும் பொருளுக்குச் சாவில்லை, அது சாசுவதமான ஒரு பொருள் என்று உபதேசித்து விட்டு, பிறகு நல்வாழ்க்கையைப் பகவான் உபதேசிக்கிறான். சாஸ்திரங்களில் புகழப்பட்ட துறவு மார்க்கத்தின் உண்மையான தத்துவத்தை விளக்குகிறான்.

உயிர்பெற்ற ஜீவன் சும்மா இருக்க முடியாது. சுபாவத்தின் பயனாகச் செயல் புகுந்தே தீரும். ஆனபடியால் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட துறவு என்பது ஆசையைத் துறப்பதே ஒழியச் செயலைத் துறப்பதல்ல. செயலனைத்தையும் துறக்க முடியாது. சிற்றின்பமும் சுயநலமும் துறந்து வாழ்க்கை நடத்துவதே சாத்தியமான துறவு மார்க்கம். எல்லாச் செயலும் பகவானுக்குச் செய்யும் தொண்டு என்று பாவித்துச் செய்: அதுவே துறவு என்கிறான் கண்ணன்.

**'' அற்றவர் என்பார் அவா அற்றார் ''**

என்று குறளாசிரியரும் விளக்கமாகச் சொன்னார்.

பற்றுக்களைத் துறப்பதே துறவு. உனக்கென்று ஏற்பட்ட செயலைத் துறக்கப் பார்க்க வேண்டாம். செய்வதையெல்லாம் கடமை நிறைவேற்றுவதற்காகச் செய்ய வேண்டும். சுயநலப் பற்றுக்கள் ஒழித்துச் செய்ய வேண்டும், அதுவே அனைவரும் பின்பற்றக் கூடிய உயர்ந்த சந்நியாசம்.

பாலில் உள்ள சத்து நெய். அதுபோல் சந்நியாசத்தினுள் நெய் பாகம் அதிலடங்கிய பற்றறுத்தல், செயலின்மையல்ல. செயலைத் துறக்கப் பார்ப்பது வீண், ஆசையும் பற்றும் ஒழிய வேண்டும். அதற்காக முயல்வாய் என்பது கீதையின் முக்கிய உபதேசம். ''லோக சங்கிரகம்'', அதாவது சமூக நன்மைக்காக உன் கடமைகளைச் செய்வாய், சுயநலத்தைத் துறந்து செய்வாய், அதை சுவாமிக்கு அளிக்கும் நைவேத்தியமாகக் கருதிச் செய்து முடிக்க வேண்டும் என்பது கீதையின் சாராம்சம்.

மனிதன் செயலெல்லாம் பிறப்புடன் வந்த சுபாவங்களின் பயன். அந்த சுபாவ குணங்கள் தம் பாட்டுக்கு வேலைசெய்யும். அதை நல்வழியில் செலுத்துவதே மனிதன் செய்யக்கூடிய முயற்சி. ஆசை என்பது பல வேஷங்கொண்டு உள்ளத்தைக் கவர்ந்துகொள்ளும். ஒரு கோட்டையைக் காப்பதுபோல் உள்ளத்தைக் காக்க வேண்டும். விரோதி, அதாவது ஆசை உள்ளே பிரவேசித்து அந்தக் கோட்டையைப் பிடித்துக் கொண்டு விட்டால் பிறகு எல்லாம் கெட்டுப் போகும். ராஜதானியை எதிரி பிடித்துக் கொண்டபின் தேசம் முழுதும் அவன் வசமாகி விடுமல்லவா? உள்ளமே ராஜதானி. ஆனபடியால் உள்ளத்தைக் காப்பாய், கவனமாகக் காப்பாய் என்று கீதை மூன்றாவது அத்தியாயத்தில் அழுத்தமாக உபதேசிக்கப் படுகிறது.

மனிதனுடைய சத்துரு ஆசை. அது உள்ளே நுழையாமல் மனம் என்ற

ராஜதானியைக் காக்க வேண்டும். காத்தால் பிறகு எல்லாம் க்ஷேமமாக இருக்கும். இது கிருஷ்ணபகவான் அர்ச்சுனனுக்குச் சொன்ன மிக முக்கியமான உபதேசம்.

பற்றுக்களை எப்படி ஒழிப்பது? அதற்கு என்ன உபாயம்?

**பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு**

"பற்றற்றான்" என்றால் பகவான். உள்ளம் உருகி அவனை இறைஞ்சி வேண்டிக் கொண்டால் எல்லா சக்தியும் உண்டாகும். ஒழிக்க வேண்டிய பற்றுக்களினின்று விடுபடுவதற்கு நல்ல பற்றைப் பற்றுதலே வழி என்று திருவள்ளுவர் இந்தக் குறளில் காட்டி யிருக்கிறார்.

கடவுள் பக்தியே உலகப் பற்றுக்களை ஒழிப்பதற்கு உதவும் உயர்ந்த சாதனம். அது வின்றி ஒழிக்கப் பார்ப்பது வீண் முயற்சியாகும். ஆண்டவன் திருவடியை சிக்கெனப் பிடிப்போம்; பிடித்தால் மீள்வோம்.

# படித்துப் பாருங்கள்!

## Unto Him A Witness

நேத்தாஜியைப் பற்றி வந்துள்ள புஸ்தகங்களில் எல்லாவற்றையும் விட, ஏன் இனி மேல் வரப்போகிற புஸ்தகங்கள் எல்லாவற்றையும்விடவும் அற்புதமான புஸ்தகம், உணர்ச்சி நிரம்பிய புஸ்தகம், காவிய ரசம் ததும்பும் புஸ்தகம் இப்பொழுது வெளியாகி யிருக்கிறது.

நேத்தாஜி மலேயா, பர்மா, முதலிய நாடுகளில் இந்தியர்களுடைய உதவியைக் கொண்டு இந்திய தேசிய ராணுவத்தை நிறுவி, இந்திய சுதந்திர சர்க்கார் நிறுவி, இந்தியத் தாயின் விடுதலைக்குப் பாடுபட்ட நாட்களில் நேத்தாஜியுடன் நிழலைப் போல் இருந்தவர் ஸ்ரீ எஸ். ஏ. ஐயர். அவருடைய அரசாங்கத்தில் விளம்பர இலாக்கா மந்திரியாக இருந்தவர். நேத்தாஜி எந்த அரசியல் ராணுவ விஷயங்களிலும் கலந்து ஆலோசிக்கும் முக்கியமான நபர்களில் ஒருவராக இருந்தவர். நேத்தாஜி எஸ். ஏ. ஐயரின் மொட்டைத் தலையைப் பற்றி ஹாஸ்யமாகக் குறிப்பிடும்போது, பதிலுக்கு நேத்தாஜியின் வழுக்கை மண்டையைப் பற்றி ஹாஸ்யம் செய்யும் அளவுக்கு நெருங்கிப் பழகியவர் எஸ். ஏ. ஐயர்.

அப்படிப்பட்டவர் நேத்தாஜியைப் பற்றி மேற்கண்ட புஸ்தகத்தை எழுதி யிருக்கிறார்.

ஆங்கிலத்தில் ஒரு பழமொழியுண்டு. "எந்தப் பெரிய மனிதனும் தன்னுடைய அந்தரங்க சேவகனுக்குப் பெரிய மனிதனல்ல" என்று. அதாவது நெருங்கிப் பழகுவதால் எந்தப் பெரிய மனிதனுடைய குற்றங்களே கண்ணில் பட்டு மரியாதை குறைந்து போக ஏதுவுண்டு. ஆனால் நேத்தாஜி இதற்கு முற்றும் விதிவிலக்காகவே விளங்கி யிருக்கிறார் என்பது தெரியவருகிறது. இந்தப் புஸ்தகத்தைப் படிக்கும் போது நேத்தாஜி எப்படிப் பட்ட வீரர்; தன்னலம் கருதாத எப்படிப் பட்ட யோகி; பிரளயம் விளையக் கூடிய மாபெரும் உற்பாதம் நிகழும் காலத்திலும், நிலைகுலையச் செய்யும் சோகச் செய்தி கேட்ட போதிலும் சற்றும் தன்னம்பிக்கை குறையாதவர், பிறருடைய சிறு சிறு கஷ்ட நஷ்டங்களைக் கவனிக்கும் இதயம் படைத்த நல்ல மனிதர் என்பன போன்ற அரிய பண்புகள் புலனாகின்றன. மேலும் மகாத்மா காந்தியினிடத்தில் நேத்தாஜி எத்தகைய மதிப்பும் மரியாதையும் அன்பும் கொண்டிருந்தார் என்பதும் தெரிகிறது. "தேசத்தின் தந்தையே! இந்தியாவின் விடுதலைக்காக நாங்கள் துவக்கி யிருக்கும் புனிதப் போருக்குத் தங்கள் நல் வாழ்த்துக்களும் ஆசிகளும் கோருகிறோம்" என்று 1944-ம் வருஷம் ஜூலை மாதம் 6-ந் தேதி ரங்கூன் ரேடியோவிலிருந்து நேத்தாஜி வேண்டிக் கொண்ட போது, அவர் நாத் தழுதழுத்ததையும் நெஞ்சம் அடைத்துக் கொண்டதையும் கண்களில் உணர்ச்சிப் பிரகாசம் ஏற்பட்டதையும் அப்படியே எழுத்தோவியமாகத் தீட்டுகிறார், எஸ். ஏ. ஐயர்!

நேத்தாஜி சுபாஷ் சந்திரபோஸ் இந்தியாவை விட்டுத் தப்பிச் சென்று சிங்கப்பூரை 1943-ம் வருஷம் அடைந்தார். அதிலிருந்து அவரது கடைசிப் பிரயாணம்வரையில் அவர் கீழ்நாடுகளிலிருந்து இந்திய சுதந்திரத்துக்காகப் புரிந்த சேவை பிரமாதமானது! அந்தப் பிரமாத சேவையை அபாரமான முறையில் கனம் எஸ். ஏ. ஐயர் எழுதி யுள்ளார். புத்தகம் கிடைக்குமிடம்: Thacker & Co., Ltd., Fort, Bombay. Price Popular Edition: Rs. 5/- Library edition: Rs. 6-8-0.

## எண்களின் சிறப்பு

கணக்கு என்றாலே மாணவர்களுக்குச் சாதாரணமாக வெறுப்பு ஏற்படுவது இயல்பு. அந்த வெறுப்புக்குக் காரணம் கணக்கு விஷயத்தில் சரியானபடி கவனம் செலுத்தாமல் அசிரத்தையாயிருந்து விடுவதுதான். கவனத்தைச் சிதற விடாமல் கணக்கிலேயே செலுத்தினால் கணக்குப் போடுவதில் வெறுப்பு ஏற்படுவதற்கே இடமில்லை என்பது இந்நூலில் விளக்கப்பட்டிருக்கிறது.

கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல், முதலிய நான்குவிதக் கணக்குகளையும் கொஞ்சங்கூடக் குழப்பமில்லாமல் தவறுதலும் ஏற்படாமல் போடுவதற்குச் சுலபமான சுருக்கு வழிகள் இந்நூலில் காணப்படுகின்றன.

தயாரித்தவர்: ம. கடலை முத்துப் பிள்ளை; வெளியிடுபவர்: செ. கணபதி செட்டியார், தயான்பாக் ஸ்டோர்ஸ், திண்டுக்கல் விலை: ரூ. 1.

## ஸ்ரீ பராசக்தியின் ஸ்ரீபுர ஸ்ரீசக்ர வர்ணனை

ஆதி பராசக்தியின் அற்புத லீலா விபூதியில் ஈடுபட்டு இந்நூலாசிரியை கும்மிப் பாட்டு மூலமாக ஸ்ரீ வித்யையை விளக்கி யிருக்கிறார். தேவியின் ரூப சௌந்தர்யமும் ஸ்ரீ சக்ர மகிமையும் இந்நூலில் தெளிவான பாடல்கள் மூலம் கூறப்பட்டிருக்கின்றன. சக்தி உபாசனையில் ஈடுபட்டிருக்கும் பக்தர்களுக்கு இந்நூல் பெரிதும் பயன்படும்.

ஆசிரியை: இடையாற்று மங்கலம் வி. ஆர். லக்ஷ்மி அம்மாள்; கிடைக்குமிடம்: எம். நாராயணசாமி, 9, முதல் தெரு, கோபாலபுரம், சென்னை; விலை: ரூ. 1—0—0.



# அழகிற்கான அரிய சாதனம் 'ஓடின்'

*"OATINE CREAM is indispensable for my toilet. I have been using it for a long time, and find it delightful, and extremely necessary to preserve a perfect skin."*

Sadhna Bose

**Oatine** *Snow*




**Oatine** *Cream*

Make sure seal is unbroken

O1





# மரகதத்தின் மனோரதம்

ஸோமாஸ்

மணி ஐந்தரை என்பதற்கு அறிகுறியாக ஆலைச் சங்கு அலறியது. கண்ணம்மாளின் நினைவு முழுவதும் அவள் மகள் மரகதத்தினிடமே சென்றது. வேலை முடிந்து அவளும் வீட்டுக்குப் புறப்பட்டிருப்பாளல்லவா? மாலை வேளையில் ஐந்தரை மணிக்கு மேல் அனேகமாக வேலை முடிந்துவிடும் அல்லவா?

ஐந்து நிமிஷம், பத்து நிமிஷம், இருபது நிமிஷம், அரை மணி ஆயிற்று. மரகதம் வரவில்லை. கண்ணம்மாளுக்கு வீட்டில் இருப்புக் கொள்ளவில்லை. மரகதம் சாதாரணமாக இத்தனை நேரத்தில் வந்துவிடுவாளே என்று நினைத்து வேதனைப் பட்டாள். அவள் கண் பார்வை மட்டுப்படாமல் இருந்தால் இவ்வளவு நேரம் சும்மா வீட்டில் உட்கார்ந்திருக்கமாட்டாள். அவள் வேலைக்குப் போகாதது கூட அதன் காரணமாகத்தான். அவளுக்கு மட்டும் பார்வை சரியாயிருந்து தேகதிடமும் இருந்தால் தன் ஒரே மகள் மரகதத்தைத் தனக்குக் கொஞ்சங்கூடப் பிடித்தம் இல்லாத அந்த வேலைக்கு மனசு ஒப்பி அனுப்புவாளா?

அடேயப்பா! அவள் திடமாயிருந்தபோது எத்தனை கட்டடங்களில் வேலை செய்திருக்கிறாள்! அவளுடைய இடைவிடா உழைப்பில் எத்தனை பெரிய கட்டடங்களெல்லாம் எழும்பியிருக்கின்றன!

ஆம். அவள் கொத்து வேலை செய்பவள். அவளது ஒரே மகள் மரகதமும் அந்தத் தொழிலைத்தான் மேற்கொண்டாள். இப்பொழுது கூட மரகதம், ஒரு பெரிய கட்டடம் கட்டும் இடத்தில்தான் சித்தாள் வேலை செய்து வந்தாள். காலையில் போனால் மாலையில் வருவாள். அம்மா தனியாக இருப்பாளே என்னும் எண்ணத்தில் ஓட்டமும் நடையுமாக வீட்டுக்கு வந்து சேருவாள். இன்றைக்கு என்னவோ மணி ஏழு ஆகியும் மரகதம் வீட்டுக்கு வரவில்லை.

கண்ணம்மாளின் மனம் நேரம் ஆக ஆக எண்ணாததெல்லாம் எண்ணியது. சின்ன வயதிலிருந்து கொத்து வேலையின் நுணுக்கங்களெல்லாம் கண்ணம்மாளுக்குத் தெரியும். அந்த வேலையில் உள்ள சங்கடங்களும் அவளுக்கு நன்றாய்த் தெரியும்.

நிறைய ஆண்பிள்ளைகளுக்கு மத்தியில் பெண் பிள்ளைகளும் வேலை செய்ய வேண்டியிருக்கும். அதில் எத்தனையோ விபரீதங்கள். மரகதமோ வயது வந்த பெண். வயதுக்குச் சற்று அதிகமாகவே புத்திசாலி. புத்திசாலித்தனத்துக்கு ஏற்ற அழகு.

பருவமும் உடல் உழைப்பும் சேர்ந்து அவள் சரீரத்தில் வனப்பையும் சொகுசையும் சற்று அதிகமாகவே அளித்திருந்தன. அவள் வேலை செய்யும் இடத்தில் விபரீதம் எதுவும் நடக்காது என்று எப்படிச் சொல்ல முடியும்?

கண்ணம்மாளின் சிந்தனை அவளையும் அறியாமல் முப்பது வருஷங்கள் பின்னோக்கிச் சென்றது.

கண்ணம்மா அப்போது இருபது வயதுப் பெண். நன்றாய் வாட்ட சாட்டமாக வளர்ந்திருந்தாள். வாழ்க்கைக்குத் தயாராக

இருந்த அவன் நல்ல தேகக் கட்டோடு விளங்கினள். காட்டு மல்லிகையில் இருக்கும் கவர்ச்சி வனப்பு அவள் சரீரத்தில் இயற்கையாக அமைந்திருந்தது. தலையில் 'சும்மாடு' வைத்துக் கொண்டு அவள் வேலை செய்வதைப் பார்த்தால் ஏதோ ஒரு வனப் பிரதேசத்தைச் சேர்ந்த ராணி மாதிரிதான் தோன்றும். அடிக்கடி கவனித்துக் கண்ணாடியில் பார்த்துச் செயற்கை முறையில் 'சீர்திருத்தம்' செய்து கொள்ளாததனாலேயே கண்ணம்மாள் நல்ல வாளிப்புடன் விளங்கினாள். அள்ளிச் செருகியிருந்த கூந்தல் அவளுக்கு அலாதியான அழகைத் தந்தது.

அந்த ஊரில் ஒரு பள்ளிக்கூடம் கட்ட ஆரம்பித்தார்கள். அதில் கண்ணம்மாளுக்கு ஒரு சிற்றாள் வேலை கிடைத்தது. சாந்தைக் குழைத்து இரும்புச் சட்டியில் வாரி எடுத்துக் கொண்டு ஏணியில் ஏறிச் சென்று மேலே வேலை செய்யும் கொத்தர்களுக்குக் கொடுக்க வேண்டும். சாந்து குழைக்கிற இடத்தில் ஐந்தாறு ஆண் பிள்ளைகள் சூழ்ந்து நின்று கொண்டு சாந்து குழைத்துக் கொண்டிருந்தார்கள். கண்ணம்மாளைப் போல் இன்னும் எத்தனையோ பெண்கள் அங்கே வேலை செய்து கொண்டிருந்தார்கள். அவர்களில் யாருக்கும் கண்ணம்மாளின் முகத்தில் இருந்த கவர்ச்சி இல்லை.

எடுப்பான மூக்கும் விசாலமான கண்களும் அவளுக்குத் தனிக் களையைத் தந்தது. தலையில் கூடையுடன் அவள் கையை வீசிவீசி நடக்கிறதே ஒரு கவர்ச்சியாயிருந்தது.

வேலை வேகமாக நடந்து கொண்டிருந்தது. யந்திரம் மாதிரி பெண்கள் வரிசையாகச் சாந்து எடுத்துக் கொண்டு போய்க் கொடுத்துக் கொண்டிருந்தனர். கட்டடத்தின் மேல் தளத்தில் வேலை நடந்து கொண்டிருந்தது.

கொத்து வேலை செய்பவர்கள் குழைத்த சாந்தைக் கையில் வாங்கும் போது சாந்தையும் பெண்களையும் மாறிமாறிப் பார்த்த வண்ணம் வேலை செய்தனர்.

கண்ணம்ம சாந்து நிறைந்த இரும்புச் சட்டியைத் தலைமேல் வைத்துக் கொண்டு ஒய்யார நடை நடந்து சென்று ஏணி மேல் ஏறிக் கொத்தன் கந்தசாமியின் கையில் கொடுத்தாள்.

"ஏ கண்ணம்மா! மேலே ஏறி வந்து கொடுத்தால் உனக்கு என்ன வந்துவிடும்? ஏணியிலே பாதியிலே நின்னுகிட்டுச் சாந்துச் சட்டியை நீட்டறியே? மேலே வா!" என்றான், சின்னக் கொத்தன் கந்தசாமி. அவன் மேஸ்திரி ஐயாவுக்கு வேண்டியவன். அவன் சொன்னபடி கேட்கவில்லை என்றால் அவ்வளவுதான். சீட்டுக் கிழிந்துவிடும். "ஐயா, அந்தச் சின்னக் கழுதை கொஞ்சங்கூட உபயோகம் இல்லீங்க! மின்னி மினுக்கத்தான் அவளுக்குப் பொழுதுக்கும் சரியாயிருக்குது. வேலையைக் கவனிக்கிறதே இல்லை!" என்று சொல்லுவான் சின்னக் கொத்தன். சற்று நேரத்துக்கெல்லாம் மேஸ்திரி ஐயா அந்தச் 'சின்னக் கழுதை'யின் கணக்கைத் தீர்த்துக் கட்டிவிடுவார். இப்படித்தான் நடந்து வந்தது.



அதை உத்தேசித்து அந்தப் பெண்களெல்லோரும் அவனிடம் சர்வ ஜாக்கிரதையாக நடந்து கொள்வார்கள். கட்டட வேலையில் கிடைக்கும் தினசரி கூலிக்காக இப்படியெல்லாம் அபிநயம் பிடிக்கவேண்டியிருந்தது. அதுவும் சின்னக் கொத்தன் கண்ணம்மாளைப் பார்த்த பார்வையே சரியில்லை. அப்படித்தான் கண்ணம்மாளுக்குத் தோன்றியது. பசித்திருக்கும் புலி தன் இரையைப் பார்க்கும் பார்வையைப் பற்றிக் கண்ணம்மாள் கேட்டிருக்கிறாள். இப்பொழுது அந்தக் கொடிய பார்வையைச் சின்னக் கொத்தனிடம் கண்டாள். வேலைக்குப் போவதற்கே அவளுக்கு மனமில்லாமல்தான் இருந்தது. ஆனால் என்னத்தைச் செய்ய? வயிறு ஒன்று இருக்கிறதே!

அன்று, கண்ணம்மா வழக்கம் போல் தலையில் 'சும்மாடு'டன் சாந்துச் சட்டியை ஏந்திச் சென்று சின்னக் கொத்தனிடம் கொடுத்தாள். ஒரு முறை, இரண்டு முறை, மூன்று முறை ஆயிற்று. சின்னக் கொத்தனின் கண்கள் கண்ணம்மாளை அப்படியே விழுங்கிவிடுகிறமாதிரி பார்த்தன. கண்ணம்மா அந்தப் பார்வையைப் பொருட்படுத்தாமல் தன் வேலையிலேயே ஈடுபட்டிருந்தாள்.

கண்ணம்மா தலையில் சாந்துச் சட்டியுடன் வருகிற காட்சியைத் தூரத்திலிருந்தே பார்த்தான் சின்னக் கொத்தன். சாந்தை வாங்கிக் கொட்டிக் கொண்டு காலி இரும்புச் சட்டியை ஏதோ யந்திரம் மாதிரி அவன் கரங்கள் கொடுத்த வண்ணம் இருந்தன. காலிச் சட்டியைக் கையில் எடுத்துக் கொண்டு கண்ணம்மா அழகாக நடந்து போகும் சித்திரமும் அவன் மனசில் பதிந்து விட்டது. கண்ணம்மா ஏணியில் ஏறும் போதும் இறங்கும் போதும் சின்னக் கொத்தனின் கண்களும் ஏணியில் ஏறி இறங்கின. அவள் அழகாக நடந்து சென்றபோது அவன் கண்களும் அவளோடு நடந்தன. அவள் சாந்துச் சட்டியோடு திரும்பியபோது அவன் கண்களும் அவள் கூடவே திரும்பின. இப்படியே இந்த மௌன நாடகம் நீண்ட நேரமாகத் தடங்கலின்றி நடந்து கொண்டிருந்தது.



அவள் மீண்டும் சாந்துச் சட்டியுடன் வந்தாள். ஏணியிலேறினாள். ஏணிப் படியில் ஏறிக் கொண்டு இருக்கும் போதே சின்னக் கொத்தனைப் பார்த்தாள். அவள் முகத்தில் அசடு வழிந்தது. அவள் முகத்தில் வியர்வை அரும்பியது. சாந்துச் சட்டியை அவன் கையில் கொடுப்பதற்காக ஏணியில் இன்னும் இரண்டு படிகள் ஏறினாள். ஏனோ அவள் கால்கள் 'கிடுகிடு' வென்று நடுங்கின. அவனைப் பரிதாபமாகப் பார்த்தாள்.

"ராசாத்தி, வா! ஏன் பயப்படறே? உன்னை முழுங்கிப்பிடுவேனா? நான் என்ன மலைப் பாம்பா?" என்று கேட்டுக்கொண்டே சின்னக் கொத்தன் கந்தசாமி அவள் கையில் இருந்த சாந்துச் சட்டியைத்தான் வாங்கிக் கொண்டான். அதைக் கீழே வைத்து விட்டு அவளை விழுங்கி விடுகிறமாதிரி பார்த்தான். பிறகு மெதுவாக அவள் கையைப் பிடித்தான்.

கண்ணம்மாளின் உடம்பு முழுவதும் குளிர் ஜுரம் வந்த மாதிரி 'வெடவெட' என்று நடுங்கியது. கண்களிலிருந்து நீர் மல்கிக் கன்னத்தில் வழிந்தது.

"அண்ணாத்தை, உங்களுக்கு......கூடப் பிறந்த......அக்கா, தங்கச்சி யாருமே இல்லையா?"......என்று நடுங்கும் குரலில் கேட்டாள். அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லை. மான் குட்டியைப் போல மருள மருள விழித்தாள். அவள் பார்வையில் ஓர் இனந் தெரியாத ஏக்கம் இருந்தது. அவள் சொன்ன வார்த்தைகளில் சோகம் குழைந்தது.

கந்தசாமியின் கைப்பிடி தளர்ந்தது. அவன் பார்வையில் இருந்த அசுர வெறி மாறியது. சட்டென்று கண்ணம்மாளின் கையை விட்டு விட்டான்.

கண்ணம்மா அடுத்த விநாடி விடுவிடு என்று ஏணியை விட்டுக் கீழே இறங்கி விட்டாள்.

பகல் ஒரு மணி யாகிவிடவே கொத்தர்களும் சித்தாள்களும் சாப்பாட்டுக்காகக் கலைந்தார்கள்.

கண்ணம்மாளுக்கு மட்டும் அன்றைக்கு என்னவோ சாப்பாடு வேண்டி யிருக்கவில்லை. சாப்பாட்டை அப்படியே வீட்டுக்கு எடுத்துச் செல்ல நினைத்து அது இருந்த இடத்திலே அதை வைத்து விட்டாள் அவள்.



சாப்பிடாமல் ஆழ்ந்த யோசனையில் ஈடுபட்டிருந்த கண்ணம்மாளின் செவியில் சின்னக் கோத்தன் மேஸ்திரியிடம் பேசிக்கொண்டிருந்தது தெளிவாகக் கேட்டது.

"எசமான், அந்தச் சின்னக் கழுதை கண்ணம்மாக் குட்டி. கொஞ்சங்கூட உபயோகம் இல்லீங்க! மின்னி மினுக்கத்தான் அவளுக்குப் பொருந்துக்கும் சரியாயிருக்குது. கொஞ்சங்கூட வேலையைக் கவனிக்கிறதே இல்லே! அந்தத் தறுக்குக்காரியினாலே மத்தவங்க வேலையும் கெட்டுப் போவுது! நீங்க... கொஞ்சம்...அவளை...!"

"நான் என்னத்தைப் பண்ணுறது அவளை? கழுதையின் கணக்கைத் தீர்த்துப் போடு! வேலை செய்யாத கழுதைக்கு இங்கே என்ன வேலை?"

பின்னால் சொன்ன மேஸ்திரியின் பதிலைக் கேட்ட கண்ணம்மாளுக்குத் தூக்கி வாரிப் போடவில்லை. அவள் முகத்தில் வருத்தக் குறியும் தென்படவில்லை. அவள் ஏற்கெனவே இதை எதிர்பார்த்துத்தானே இருந்தாள்? எத்தனையோ பேர்கள் விஷயத்தில் எத்தனையோ நாட்களாக நடந்துவரும் காரியம் தானே இது? அப்படியிருக்க, தூக்கி வாரிப் போடுவதற்கு இதில் என்ன இருக்கிறது? பார்க்கப் போனால், உண்மையாகவே கண்ணம்மாளுடைய முடிவும் அதுதானே? அவன் கணக்கைத் தீர்த்துப் போடுவதற்கு முன்னால் அவளே அதைத் தீர்த்துவிட்டுப் போகத் தயாராகி விட்டாள்.

வேலை போனதும் கண்ணம்மா அதற்காக வருத்தப்பட்டுக் கொண்டிருக்கவில்லை. கையில் தொழில் இருக்கும்போது அவளுக்கு என்ன கவலை?

கண்ணம்மா தன் தகப்பனிடம் வேலை போனதற்குக் காரணம் சொல்லவில்லை. அதை எப்படி அவள் சொல்ல முடியும்? வாழ்க்கைக்குத் தயாராகி மொட்டவிழ்ந்த மலர் போல் இருந்த அவளுக்கு அவள் தகப்பன் கல்யாணத்துக்கு நிச்சயம் செய்து விட்டான். அவனுக்குச் சுமாராக வரும்படி இருந்ததனால் கண்ணம்மா வேலையை விட்டு நின்று விட்டதைப் பற்றி அவன் அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. மேலும் கல்யாண வயதை அடைந்துவிட்ட அவளை இனி வேலைக்கு அனுப்பக் கூடாது என்று அவனே நினைத்துக் கொண்டிருந்தான்.

கல்யாணம் ஆனதும் அவள் கணவன் முத்துவும் அவளுடனேயே வந்து இருந்தான். அவர்களுடைய வாழ்க்கை மிகவும் இன்பமாகச் சென்றது. முத்து ஆலையில் வேலை செய்து நிறையச் சம்பாதித்தான். ஆகவே, கண்ணம்மா வேலைக்குப் போகவேண்டிய அவசியமே இருக்கவில்லை.

இப்படிப் பல வருஷங்கள் சென்றன. அவர்கள் இன்ப வாழ்க்கையின் அன்புப் பரிசாக மரகதம் பிறந்தாள். மரகதம் பிறந்த ஒரு வருஷத்துக்கெல்லாம் கண்ணம்மாளின் தகப்பன் காலமாகிவிட்டான். கண்ணம்மாளுக்கு

அதிலிருந்து பிடித்தது சனியன். குடும்பத்தில் தொடர்ந்து பல சங்கடங்கள் ஏற்பட்டன. முத்து நோய் வாய்ப்பட்டுச் சில நாளில் மரண மடைந்தான். அப்பொழுது மரகதத்துக்கு மூன்று வயது. நிராதரவாக இளங் குழந்தையுடன் விடப்பட்ட கண்ணம்மா மீண்டும் கொத்து வேலையை மேற்கொள்வதைத் தவிர வேறு வழியில்லாமற் போய் விட்டது. அவளுக்கு அந்தத் தொழிலைப் பற்றி நினைக்கக் கூட விருப்பமில்லை.

தாயை யொட்டி மரகதமும் அந்தக் கொத்து வேலையையே செய்ய வேண்டியதாயிற்று.

நினைவுச் சுழல் திடீரென்று தடைப் பட்டது. மணிக் கூண்டு கடிகாரம் 'டாண், டாண்' என்று எட்டு மணி அடித்தது. கண்ணம்மாளின் கவலை அதிக மாகிவிட்டது. பழைய சம்பவங்களைச் சிந்தித்துக் கொண்டிருக்கும் அளவுக்கு அவளுக்கு மனத்தில் அமைதியில்லை.

மரகதம் கொஞ்ச நாட்களாகவே வீட்டுக்குத் தாமதமாகத்தான் வந்தாள். கண்ணம்மா அதை அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. இன்றைய தினம் அதிக நேரம் ஆகிவிடவே அவள் மனத்தில் பீதி குடிகொண்டது. மரகதத்துக்கு என்ன நேர்ந்து விட்டதோ என்னவோ என்று வேதனைப்படத் தொடங்கினாள்.

அந்தச் சமயம் 'டக் டக்' கென்று வாசற் கதவு தட்டும் சத்தம் கேட்டது. கண்ணம்மா தட்டித் தடுமாறி எழுந்து சென்று கதவைத் திறந்தாள். மரகதம் உள்ளே நுழைந்தாள். அவள் பின்னாலேயே ஒரு இளைஞனும் நுழைந்தான். கண்ணம்மா அவனைக் கவனிக்கவில்லை.

"என்ன மரகதம், வர வர ரொம்ப நேரமாகி விடுகிறதே! நானும் பதினைந்து நாளாய்ப் பார்த்துக்கிட்டு வரேன். என்ன காரணம்? விளக்கு வைச்சப்புறம்கூடக் கட்டட வேலை செய்வாங்களா? நான் என் அநுபவத்தில் அப்படிக் கேட்டதேயில்லையே!" என்றாள் கண்ணம்மா. அவள் குரலிலே அன்பும் கண்டிப்பும் சேர்ந்து தொனித்தது.

"இல்லை, அம்மா! இனிமே நேரமே ஆகாது. நான் இன்னியிலிருந்து வேலையை விட்டு விட்டேன். ஒரு மாசமா உங்கிட்ட ஒரு சமாசாரம் சொல்லணும்னு யோசிச்சிக்கிட்டு இருக்கேன்......!" என்றாள் மரகதம்.

உடனே கண்ணம்மா பதறிப் போனாள்.

"நீ ஏன் வேலையை விட்டு விட்டாய்? அந்த மேஸ்திரிப் பயல் ஏதானும்...! எனக்கு அப்பவே தெரியும். இதுக்கு ஒரு மாசம் யோசனை பண்ணிக்கிட்டு இருந்தாயாக்கும்!"

"அம்மா, அம்மா! அவரை வையாதே, அவரு நல்லவரு. உனக்குக் கொத்து வேலையைக் கண்டாலே பிடிக்காமற்போய் விட்டது என்ற காரணத்தை உத்தேசித்துத்தான் என்னைக் கல்யாணம் பண்ணிக்கிறதுக்காகவே

அந்த மேஸ்திரி வேலையைத் தொலேத்து விட்டு நம்ம ஊர் ஆலேயிலே வேறே வேலே தேடிக்கிட்டாரு, இதோ அவரே என்னோட வந்திருக்காரு!" என்ருன் மரகதம். அப்பப்பா! அப்பொழுது வெட்கத்தினுல் அவன் முகம் போன போக்கைப் பார்க்க வேண்டுமே!

உடனே முருகேசன் கண்ணம்மாளுக்கு எதிரே வந்து அவளேக் கையெடுத்துக் கும்பிட்டான். மரகதம் கூடத்து லாந்தர் விளக்கைப் பெரிது பண்ணினுள்.

"அம்மா, உங்களுடைய ஆசிர்வாதம் எப்பவும் வேணும். மரகதம் உங்களேப் பற்றி நிறையச் சொல்லி யிருக்கா. உங்களுக்குக் கொத்து வேலேயிலே உள்ள வெறுப்பைப் பத்தி சொல்லி யிருக்கா. அதுவும் கொஞ்சம் பெரிய வேலே செய்யறவன், மேஸ்திரி அப்படின்னு உங்களுக்கு வரும் கோபத்தைப் பத்தியும் சொல்லி யிருக்கா. அதற்காகவே அந்த மேஸ்திரி வேலேயை விட்டுவிட்டேன். மரகதத்தின் அதிர்ஷ்டம் எனக்கு ஆலேயிலே வேலேக் கிடைச்சுது. ஒரு மாசம் வேலே செஞ்சு முதல் சம்பளம் வாங்கினப்புறம் தான் உங்க வீட்டுப் பக்கம் காலே வைப்பேன் என்று மரகதத்தினிடம் அப்பவே சொல்லிப் பிட்டேன்!" என்ருன் முருகேசன்.

"நீ யார் அப்பா? உன் பேர் என்ன? நீ எந்த ஊர்?" என்று கண்ணம்மா மிகவும் பரிவோடு விசாரித்தாள்.

"என் பெயர் முருகேசன். சொந்த ஊர் பொன்னேரி. சின்ன வயசிலேயே தாய் தகப்பன் இருவரும் போயிட்டாங்க. எங்க அப்பாவுக்குத் தெரிஞ்சவர் ஒருத்தர் கிட்டே நான் இருந்தேன். அவரிடத்தில்தான் நான் இந்தக் கொத்து வேலேயைக் கத்துக்கிட்டேன். ரொம்ப வருசமா இந்த வேலேயைச் சந்தோசமாகப் பார்த்துக்கிட்டு வந்தேன். மரகதத்தைப் பார்த்துப் பேசிப் பழகிய பிறகு உங்க சமாசாரம் தெரிஞ்சுது. அப்புறம் என்ன பாடுபட்டு அந்த வேலேயை ஒழிச்சேன் தெரியுமா? நீங்க ஒரேயடியா எப்பவோ நடந்த ஒரு சமாசாரத்தை நினேச்சுக்கிட்டுக் கொத்து வேலே செய்யறவங்களேப் பத்திக் குறைவாக நினேக்கிறது சரியில்லே. ஆனுலும் மரகதத்தைக் கல்யாணம் செஞ்சுக்க வரவங்களுக்கு நல்ல நிபந்தனே விதிச்சீங்க!" என்ருன் முருகேசன்.

கண்ணம்மாளுக்கு ஆனந்த மிகுதியினுல் பேச நா எழவில்லே.

"அப்பா முருகேசா, மரகதம் கல்யாணமே வேண்டாமென்று சொல்லிக்கிட்டு இருந்தா. எப்போ நீ அவளேயே சரிப்படுத்திட்டியோ இனிமே நான் சொல்றதுக்கு என்ன இருக்கிறது?" என்ருன் கண்ணம்மா.

மரகதமும் முருகேசனும் சந்தோஷ மிகுதியில் ஒருவரை யொருவர் பார்த்துக் கோணலாகச் சிரித்துக் கொண்டனர்.

## கல்கத்தாவில் கான மழை




கல்கத்தா ரஸிக ரஞ்சனி சபையார் சென்ற 31-1-52 முதல் 11-2-52 வரை பன்னிரண்டு தினங்கள் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் உற்சவத்தை மிகச் சிறப்பாகக் கொண்டாடினுர்கள். இரண்டாயிரம் பேர் உட்கார்ந்து கான ரஸம் பருக வசதியுள்ள பிரும்மாண்டமான பந்தல் அமைத்திருந்தார்கள். அந்தப் பந்தலில் ஒரு புறத்தில் அமைக்கப்பட்டிருந்த சிறிய மண்டபத்தில் கர்நாடக சங்கீதத்துக்குப் புத்துயிரும் புது மெருகும் அளித்த ஸ்ரீ தியாகராஜரது படமும் அவர் இஷ்ட தெய்வமாகப் போற்றிப் பூஜித்த ஸ்ரீராமர் படமும் சிறந்த முறையில் அலங்கரித்து வைக்கப்பட்டிருந்தன.

'தியாகராஜர்' என்ற நாடகத்துடன் விழா ஆரம்பமாகியது. விழாவை ஆரம்பித்து வைத்தவர் துறைமுகப் பாதுகாப்புக் குழுத் தலேவர் ஸ்ரீ என். எம். ஐயர் அவர்கள். கல்கத்தா ரஸிக ரஞ்சனி சபை நாடகக் குழுவினர் மகான் தியாகய்யரின் வாழ்க்கையில் முக்கிய சம்பவங்களே நாடகமாக அமைத்துச் சிறப்பாக நடித்தார்கள்.

தமிழ் நாட்டிலிருந்து விழாவுக்காக வந்திருந்த பிரபல சங்கீத வித்வான்களின் இசையரங்குகளும் இளம் வித்வான்களின் கச்சேரிகளும் நடைபெற்றன. பிப்ரவரி 10உ ஆலத்தூர் சகோதரர்களின் சங்கீதக் கச்சேரி, ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளே வயலின், பாலக்காட்டு மணி மிருதங்கம், ஆலங்குடி ராமச்சந்திரன் கடம் ஆகிய பக்க வாத்தியங்களுடன் நன்ருக அமைந்தது. பிப்ரவரி 11உ ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் கச்சேரியுடன் விழா இனிது முடிந்தது.




## 10. கனவா, நினைவா?

ஏழு நாட்கள் கமலம் ஆகாயப் பிரயாணம் செய்ய வேண்டியிருந்தது. இரவு வேளைகளில் எங்கேயாவது தங்குவதும் சூரிய உதயத்துக்கு முன்பே எழுந்திருந்து பிரயாணத்தைத் தொடங்குவதுமாக அந்த ஏழு நாட்களும் கழிந்தன.

எட்டாவது நாள் பிரயாணம் கமலத்துக்கு மிகவும் அலுப்பாக இருந்தது. அன்னப் பறவைகளுக்கும் அலுப்பாகத்தான் இருந்தது. காரணம், ஏழு நாட்களாகச் சரியான உணவு இன்றிப் பிரயாணம் செய்ததுதான்.

அன்று சூரியன் அஸ்தமனம் ஆகிக் கொண்டிருந்த சமயத்தில், ஒரு செழிப்பான மாந்தோப்பில் அன்னப் பறவைகள் கமலத்துடன் இறங்கின. உயர்ந்த ஜாதி மாம்பழத்தின் மணம் கம்மென்று வீசியது. அங்கே இறங்கிய சற்று நேரத்துக்கெல்லாம் அன்னப் பறவைகள் இளவரசர்களாக உருமாறி விட்டன. உடனே அவர்கள் மூலைக்கு ஒருவராகச் சென்று வேண்டிய மட்டும் மாம்பழங்களைப் பறித்து, மூட்டையாகக் கட்டிக் கொண்டு வந்தார்கள். தோப்பின் நடுவில் அமைந்திருந்த அழகான குளத்தங்கரையில் உட்கார்ந்து சகோதரர்களும் கமலமும் மாம்பழத்தைத் தின்று குளத்தில் வேண்டிய மட்டும் நீர் பருகினார்கள். அப்பாடி! கமலத்துக்கு இப்போதுதான் களைப்புத் தெளிந்தது.

அந்தக் குளத்தங்கரையில் அழகான மண்டபம் ஒன்று இருந்தது. இராப்பொழுதை அங்கேயே கழித்தார்கள்.

"கமலம், நீ இந்த மண்டபத்திலேயே இருக்கலாம். அதோ தெரிகிறதே, அந்த வீடு தோட்டக்காரனுடையது. அவனுக்கு நம்முடைய துர்ப்பாக்கிய நிலைமை தெரியும். அவனிடம் உன்னைப் பற்றிச் சொல்லிவிடுகிறோம். பிறகு நீ பயமின்றி இங்கே இருக்கலாம். இனிமேல்தான் எங்கள்மீது ஏவப்பட்டிருக்கும் கொடிய மந்திர சக்தியைப் போக்குவதற்கு வழி என்ன என்று யோசிக்க வேண்டும். அது உன் கையில்தான் இருக்கிறது!" என்று குரல் தழு தழுக்கக் கூறினான் மூத்த சகோதரன்.

கமலத்துக்கும் மிகவும் வேதனையாயிருந்தது. கண்ணிலிருந்து பெருகி வந்த நீரைத் துடைத்துக் கொண்டாள்.

சகோதரர்கள், படுத்துக் கொள்வதற்கு முன்பு அந்தத் தோப்புக் காவலாளியிடம் கமலத்தைப் பற்றிச் சொன்னார்கள். தோட்டக்காரன் கமலத்துக்கு ஒரு பாயும், தலைக்கு வைத்துக் கொள்ள ஒரு மணையும் கொடுத்தான். தோட்டக்காரன் மனைவி கமலத்திடம் மிகவும் அன்பாகப் பேசினாள். அரண்மனையில் எவ்வளவோ சௌகரியமாகப் பஞ்சணை மெத்தையில் படுத்துத் தூங்கிய கமலம் இங்கே அந்தப் பாயில் அநாதை மாதிரி படுத்துத் தூங்கினாள். பாவம், ராஜகுமாரர்களும் வெறும் பாயில் படுத்துத்தான் தூங்கினர். ஏழு நாட்களாக எத்தனையோ மைல்கள் கமலத்தையும் தூக்கிக் கொண்டு சரியான ஆகாரமில்லாமல் ஆகாயப் பிரயாணம் செய்த அலுப்பு அவர்களுக்கு. ஆகவே அயர்ந்து தூங்கிவிட்டார்கள்.

பொழுது விடிந்து அன்னப் பறவைகளின் 'ஹூ ஹூ' சத்தம் கேட்டுக் கமலம் எழுந்தாள். பிறகு அன்னப் பறவைகள் வான வீதியில் பறக்கத் தொடங்கிவிட்டன.

கமலம் தனியே விடப்பட்டாள். இது வரையில் அவள் மனசில் இலேசாக இருந்த கவலை இப்பொழுது அதிகமாகி விட்டது. மாமரத்தடியில் உட்கார்ந்து தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்து விட்டாள்.

அப்பொழுது மரக் கிளையின் மேலிருந்து, "பெண்ணே, ஏன் அழுகிறாய்? உன் துக்கத்துக்கு என்ன காரணம்?" என்று ஒரு இனிமையான குரல் அன்போடு கேட்டது.

கமலம் ஆச்சரியத்துடன் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு நாற்புறமும் பார்த்தாள். யாரையும் காணோம். அடுத்த நிமிஷம் மறுபடியும் அதே குரல் கேட்டது. ஆகா! அந்தக் குரலில்தான் என்ன இனிமை!

கமலம் அண்ணாந்து மரக்கிளையைக் கவனமாக உற்றுப் பார்த்தாள். அந்தக் கிளையில் ஒரு அழகான பச்சைக் கிளி இருந்தது.

"கிளியே, நீயா என்னை அவ்வளவு அன்போடு விசாரித்தாய்? எங்கே, கீழே பறந்து வா! பயப்படாதே! நான் உன்னை ஒன்றும் செய்துவிட மாட்டேன். உன் அழகான குரலிலிருந்து வரும் இனிமையான பேச்சைப் பக்கத்திலிருந்து கேட்கிறேன்!" என்றாள் கமலம்.

கிளி உடனே பறந்து வந்து அவளுக்குச் சமீபமாக இருந்த மரக்கிளையில் உட்கார்ந்தது.

கமலம் அந்தக் கிளியைக் கையில் எடுத்துக் கொண்டு அதன் வெல்வெட்டுப் போன்ற பச்சை இறகுகளை அன்போடு தடவிக்கொடுத்தாள். கிளி பவளம் போன்ற தன் அழகிய வாயைத் திறந்து கமலத்தைப் பார்த்து, இனிமையான குரலில் பேச ஆரம்பித்தது:



"பெண்ணே, நான்தான் உன்னை அழைத்தேன். உன்னைப் பார்த்தால் ஒரு ராஜகுமாரி மாதிரி இருக்கிறதே! சோபை குன்றியிருக்கும் உன் முகத்தில் ஒரு தனி ராஜ குடும்பத்துக் களை வீசுகிறதே! தாமரை மலரைப் போல் இருக்கும் உன் முகம் வாடி இருப்பானேன்? உன் விசாலமான கண்களிலிருந்து கண்ணீர் பெருகிக் கன்னத்தில் வழிந்திருக்கிறதே! உன் பெயர் என்ன? நீ யார்? நீ எப்படி இங்கே வந்தாய்?" என்று கேட்டது அந்தக் கிளி.

கமலத்துக்குச் சந்தோஷம் ஒரு புறமும் ஆச்சரியம் ஒரு புறமுமாகத் தோன்றித் திணற அடித்தன.

"கிளியே, சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை என்று சொல்லிக் கேட்டிருக்கிறேன். ஆனால் உன்னைப் போன்ற சொல்லித் தராமலே பேசும் புத்திசாலிக் கிளியை நான் பார்த்ததேயில்லை! நீ நினைத்தது சரிதான். நான் உண்மையிலேயே ஒரு ராஜகுமாரிதான். பட்டத்து யானையின் மேல் பவனி வர வேண்டியவள்தான். ஆடை ஆபரண அலங்காரங்களுடன் அரண்மனையில் வாழ வேண்டியவள்தான். தோழிப் பெண்கள் புடை சூழ அரண்மனை நந்தவனத்தில் ஆனந்தமாக ஆடிப்பாட வேண்டியவள்தான். பதினொரு இளவரசர்களின் அருமைத் தங்கையாகப் பிறந்தேன். இங்கிருந்து கடல் கடந்து வெகு தூரத்துக்கு அப்பால் இருக்கும் அமரபுரியின் இளவரசி நான். பெயர் கமலம். சித்தியின் சூழ்ச்சியினால் என் அண்ணன்மார்கள் அன்னப் பறவைகளாகி விட்டனர். அவர்கள்தான் என்னை இங்கே கொண்டு வந்து சேர்த்தனர். அவர்கள் மீது செலுத்தப் பட்டிருக்கும் கொடிய மந்திரத்தை எப்படிப் போக்குவது என்று தெரியாமல்தான் கண்ணீர் விடுகிறேன்!" என்றாள் கமலம்,

இதைக் கேட்டதும் கிளி அவள் கைகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு 'கீ கீ' என்று ஆனந்த பரவசமாகக் கத்தி அவளைச் சுற்றி சுற்றி வந்தது.

கமலத்துக்கு ஒன்றும் புரியவில்லை. "என்ன கிளியே, என் சோகக் கதையைக் கேட்டு இவ்வளவு ஆனந்தப் படுகிறாயே! ஏன்?" என்று கேட்டாள்.

"கமலம், தயவு செய்து என்னோடு அந்தக் குளத்தங்கரைக்குவா! எல்லாம் விவரமாகச் சொல்லுகிறேன்!" என்று சொல்லி விட்டுக் கிளி விர்ரென்று பறந்து குளத்தங்கரைக்குச் சென்று ஜலத்துக்கு அருகே போய் உட்கார்ந்தது. கமலமும் ஒன்றும் புரியாமல் வியப்புடன் கிளியின் அருகே போனாள்.

"கமலம், அமரபுரி இளவரசியாகிய உன்னைப் பார்ப்பதற்காக நான் எத்தனை நாட்களாக இந்தத் தோப்பில் காத்துக் கொண்டிருக்கிறேன், தெரியுமா? உனக்கு நல்ல காலம் வந்து விட்டது. உன் சகோதரர்களைப் பிடித்திருக்கும் மந்திரசக்தி மறையும் காலம் வந்து விட்டது. அதற்காக நீ ஒரு காரியம் செய்வாயா?" என்று கிளி கேட்டது.

"ஆகா! அவசியம் செய்வேன். என் அண்ணன்மார்கள் பழைய உருவத்தை அடைவதற்காக என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராயிருக்கிறேன்!" என்றாள் கமலம்.

"கமலம், நான் அந்தக் காரியத்தைச் சொன்னால் பின் வாங்க மாட்டாயே!" என்று கிளி கெஞ்சும் குரலில் கேட்டது.

"கிளியே, நான் வீர மன்னர் குலத்தில் பிறந்தவள். கோழையல்ல. என் உயிரையே நீ கேட்டாலும் கொடுக்கச் சித்தமாயிருக்கிறேன். என் அண்ணன்மார்களுக்குப் பழைய உருவம் வந்து விட்டால் போதும்!" என்று உணர்ச்சியோடு கூறினாள் கமலம்.

"சரி, கமலம்! என்னைப் பிடித்து இந்தக் குளத்தில் அமுக்கிக் கொன்று விடு! அது தான் நீ செய்யவேண்டிய காரியம். உம், சீக்கிரம்!" என்றது கிளி.

இதைக் கேட்டதும் கமலத்தின் உடம்பெல்லாம் பதறியது.

"ஆகா! என்ன காரியம் செய்யச் சொல்லுகிறாய், கிளியே! என்னையும் என் சித்தியைப் போல் இரக்கம் இல்லாத கொடியவள் என்று நினைத்தாயா? மனித உருக் கொண்ட ராக்ஷஸி என்று நினைத்தாயா? ஊஹூம்! மாட்டேன், மாட்டவே மாட்டேன்!"

"கமலம் நீ இந்தக் காரியத்தைச் செய்யாவிட்டால், உன் கண்ணெதிரிலே இந்தக் குளத்தில் விழுந்து உயிரை விட்டுவிடுவேன்!" என்று கிளி கூறியது.

கமலம் சற்று நேரம் தயங்கினாள். கிளி மிகவும் தீர்மானமாகச் சொல்லவே கொஞ்சம்கூட மனம் இல்லாமல் அந்தக் கிளியைப் பிடித்துக் கண்களை மூடிக் கொண்டு தண்ணீரில் அமுக்கினாள். கிளி மறைந்து விட்டது.

"கமலம், நீ செய்த இந்தப் பேருபகாரத்தை நான் என்றும் மறக்க மாட்டேன். எங்கே இப்படி நிமிர்ந்து என்னைப்பார்!" என்று கம்பீரமாகக் கூறித் தன் முகத்தைப் பிடித்து நிமிர்த்திய கைகளை விலக்கிக் கொண்டே கமலம் கண்களைத் திறந்தாள்.

என்ன ஆச்சரியம்! அவளருகே நிற்கும் அழகிய ராஜகுமாரன் யார்? ஒன்றும் தோன்றாமல் கமலம் திகைத்தாள். (தொடரும்)

கெ.க்கெ.கலிஃயப்

# 'கோலினஸ்' புன்னகையில் ஆரோக்யம் ததும்புகிறது!

'கோலினஸ்' வேறெந்த டென்டல் க்ரீமையும் விட எவ்வளவோ அதிக சிக்கனம் வாய்ந்தது—ஏனெனில், ஈரமில்லாத பிரஷில் அரையங்குல அளவே போதுமானது.

நுரைதான் இந்த வித்தியாசத்திற்குக் காரணம்!

இந்தியாவில் தயாரிப்பாளர்கள்:

ஜியாப்ரே மானர்ஸ் & கோ. லிட்., பம்பாய் 1

கிளைகள்: கல்கத்தா - மதராஸ் - டில்லி



# அதிகப்படி தென்பு



நீங்களும் பெறுக

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்



தென்புடன் விளங்குக...... உங்கள் தினசரி போஜனத்துடன் வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிட்டு வருக...... அது சுருசுருப்பூட்டுவதும் ருசிமிகுந்ததுமான ஒரு டானிக். அதிகப்படி தென்பை வளர்க்க உதவுவதில் நிச்சயகுணமுள்ளது. வாட்டர்பரீஸ் காம்பவுண்டு உங்களுக்கு அத்யாவசியமான புஷ்டிபதார்த்தங்களை வழங்கி, உங்களுக்கு சோர்வு, ஜலதோஷம். இருமல், எதுவும் ஏற்படாத வாறு எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கும். வயது வந்தவர், இளைஞர் யாவருக்கும் தேக வலிமை பெற இன்றியமையாதது.

**WATERBURY'S**

**COMPOUND**

**வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்**

உங்களை தென்புடன் வைத்திருக்கும்




NAS 744



# விசித்திரத் துறவி!

கன்னடக் கதை: **சி. எஸ். குல்கர்னி** மொழி பெயர்ப்பு: **வாஞ்சி**

சரியாக மத்தியானம் பன்னிரண்டு மணி இருக்கும். வெய்யில் சகிக்க முடியவில்லை. அனல் காற்று வீசிக்கொண்டிருந்தது. பறவைகளும் மிருகங்களும் கூட ஒண்டிக் கொள்வதற்காக நிழல்களை நாடிச் சென்றன.

அப்போதுதான் சேகர் மத்தியானச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு தன் அறையில் வந்து படுத்தான். அவனுக்கு வியர்வை கொட்டியது. ஓயாமல் விசிறிக் கொண்டிருந்தான்.

சிறிது நேரத்தில் அவனுக்குத் தூக்கம் கண்ணைச் சுழற்றிக்கொண்டு வந்தது. தூக்கம் வந்துவிட்டது என்பதற்கு அடையாளமாக அவன் கையிலிருந்த விசிறி நழுவிக் கீழே விழுந்தது.

"அம்மா...கொஞ்சம் சாப்பாடு கொடுங்கள்."

இந்தக் கூக்குரலைக் கேட்டதும் சேகர் திடுக்கிட்டான். தூக்கம் கலைந்தது; கண்களைத் திறந்து பார்த்தான்.

சென்ற பல நாட்களாகக் கூட்டங்களிலும் மகாநாடுகளிலும் கலந்து கொண்டதால் சேகருக்கு இரவில் சரியான தூக்கமே இல்லை. அதனால் அந்தப் பிச்சைக்காரன் தன் தூக்கத்தைக் கலைத்ததைக்குறித்து அவனுக்கு ஆத்திரம் உண்டாயிற்று.

பிச்சைக்காரன் என்றாலே சேகருக்குப் பிடிப்பதில்லை. அதிலும் அவன் அந்த வெய்யில் நேரத்தில் சேகரின் தூக்கத்தைக் கலைப்பதென்றால்......!

வாயிற்புறத்தில் நிடாகந்திரத்துடன் நின்று கொண்டிருந்த அந்தத் துறவியைப் பார்த்ததும் சேகர் திகைத்துப் போனான். காவி வஸ்திரம் உடுத்தியிருந்த அந்தத் துறவியின் தேகம் வஜ்ரம் போல் பலம் பொருந்தியதாக இருந்தது. தலையில் ரோமம் அடர்த்தியாக இருந்தது. அவரது நீண்ட தாடியும் மீசையும் அவரது முகத்தைப் பாதி மறைத்துக் கொண்டிருந்தன. கறுப்பு நிறமுள்ள துறவியின் தேகத்தில் விபூதி பளிரென்று மின்னிக் கொண்டிருந்தது.

மேற்படி துறவியின் தோற்றம் சேகரின் கோபத்தை அதிகப்படுத்தியது.

"இப்போது மணி என்ன தெரியுமா! உமக்கு ஏதாவது மூளை இருக்கிறதா! பிச்சை வாங்க வருவதற்கு இதுதான் சரியான நேரமோ! பீமசேனனைப்போல் இருக்கிறீரே! பிச்சை எடுக்கும்படியான கேடு என்ன வந்தது! உமக்குப் பிச்சை எடுக்க வெட்கமாக இல்லையா!" என்று கேள்வி மேல் கேள்வி போட்டு, சேகர் தன் ஆத்திரத்தையெல்லாம் கொட்டி விட்டான்.

"ஐயா! ஏன் இப்படியெல்லாம் கோபித்துக் கொள்கிறீர்கள்! 'சாப்பாடு இல்லை' என்று சொன்னால் நான் போய் விடுகிறேன்" என்று அந்தத் துறவி சாந்தமாகச் சொல்லிவிட்டு, அங்கிருந்து போகத் தொடங்கினார்.

சேகர் கோபத்துடன் அவரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"கொஞ்சம் வழி விடுங்கள்" என்ற அவனது மனைவியின் இனிமையான குரலைக் கேட்டதும் அவன் திரும்பிப் பார்த்தான்.

சைலஜா ஒரு பாத்திரத்தில் சாதமும் குழம்பும் வைத்துக் கொண்டு நின்றாள். அதைக் கண்டதும் சேகர் துறவிமீது உண்டான கோபத்தை அவளிடம் காட்ட முற்பட்டான்.

"அவர் போய்விட்டார். இதை உள்ளே கொண்டு போ" என்றான் வெறுப்புடன்.

"கொண்டு வந்ததை எதற்காகத் திருப்பி எடுத்துச் செல்ல வேண்டும்! தயவு செய்து அவரைக் கூப்பிடுங்கள். இதை அவரிடம் கொடுத்து விடுகிறேன்" என்றாள் சைலஜா.

"அவரிடம் இதைக் கொடுக்கா விட்டால் என்ன! குடி முழுகிப் போய் விடுமோ!" என்று சேகர் உரக்கக் கத்தினான்.

"ஏன் இப்படிக் கத்துகிறீர்கள்! நடு மத்தியான வேளையில் கேட்பவருக்கு பிச்சை கொடுக்க மறுப்பது தர்மமாகுமா!"

"உன்னுடைய தர்மமும் நீயும்! இந்தத் தேசத்தில் பிச்சைக்காரர்களும் சாதுக்களும் கொசுக்களைப் போல் பெருகி வருவது எதனால் தெரியுமா! உன்னைப் போல் படித்த பெண்கள்கூட மூட நம்பிக்கைகளை விடாமல் இறுகப் பற்றிக் கொண்டிருப்பதனால் தான்."

"போதும், உங்கள் பிரசங்கம். வழிவிட்டு நில்லுங்கள். எனக்கு உள்ளே ஏராளமாக வேலை இருக்கிறது" என்று சொல்லிவிட்டு சைலஜா வாயிற் பக்கம் செல்ல அடி எடுத்து வைத்தாள்.

"இது என்ன தர்ம சத்திரம் என்று நினைத்துக் கொண்டாயா!" என்று ஆத்திரப்பட்டான் சேகர். தன் வார்த்தையை சைலஜா லட்சியம்

செய்யாமல் சென்றது அவனது கோபத்தை இன்னும் அதிகப்படுத்தியது.

" ஒரே ஒருவருக்குக் கொஞ்சம் சாப்பாடு போட இவ்வளவு தூரம் ஆட்சேபிக்கிறீர்கள். அப்படி யிருக்க நமது வீட்டை நீங்கள் தர்ம சத்திரம் என்று சொல்வது விசித்திரமாகத் தான் இருக்கிறது...போதும்! வாசற்படியில் நின்று நாம் சண்டை போடுவதைப் பார்த்து யாராவது சிரிக்கப் போகிறார்கள். நான் வாசலில் போய்ப் பார்க்கிறேன். அந்தச் சாமியார் அதிக தூரம் போயிருக்க மாட்டார்."

இவ்விதம் சொல்லி விட்டு சைலஜா வாசலை நோக்கிச் செல்ல முற்பட்டாள். எனவே, சேகருக்கு அப்பால் நகர்ந்து கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.

துறவி ஐந்து ஆறு வீடுகளுக்கு அப்பால் சென்று கொண்டிருந்தார்.

" இதை வாங்கிக் கொண்டு போங்கள் " என்று உரக்கக் கூவினாள் சைலஜா.

துறவி திரும்பி வந்து தாம் வைத்திருந்த குவளையில் சைலஜா கொடுத்த அன்னத்தையும் குழம்பையும் வாங்கிக் கொண்டார். சைலஜா புன்முறுவலுடன் சேகரைப் பார்த்துக்கொண்டே உள்ளே சென்றாள்.

துறவி திரும்பிச் செல்லும் தறுவாயில் சேகர் அவரைக் கூப்பிட்டான்.

" ஐயா, ஏன் கூப்பிட்டீர்கள் !"

" உமது பெயர் என்ன !"

" பிச்சைக்காரன்."

" நீர் ஒரு பிச்சைக்காரன் என்பது நீர் சொல்லாமலே தெரியும். உமக்குப் பெயர் ஒன்றும் இல்லையா !"

" பிச்சைக்காரன் என்றுதான் என்னை எல்லோரும் கூப்பிடுகிறார்கள்."

" உமக்கு எந்த ஊர் !"

" எனக்குச் சொந்தமாக ஊர் எதுவும் இல்லை. நான் எங்கு தங்குகிறேனோ, அதுதான் என்னுடைய ஊர்."

தான் கேட்ட கேள்விகளுக்குத் துறவி பளிச் சென்று பதில் அளித்தது சேகருக்கு என்னவோ போல் இருந்தது. எனவே, அவரை வாயடைத்துப் போகும்படி செய்ய எண்ணினான்.

" நீங்கள் மிகவும் ஆரோக்கியமாக இருக்கிறீர்கள் ; திடகாத்திரமாகவும் இருக்கிறீர்கள். ஏதாவது வேலை செய்து ஜீவனம் செய்வதற்கு என்ன !" என்று கேட்டான் சேகர்.

" நான் வேலை செய்துதான் சாப்பிடுகிறேன்."

துறவியின் மேற்படி பதிலைக் கேட்டதும் சேகருக்குச் சிரிப்பு தாங்க முடியவில்லை.

" இது நல்ல வேலைதான் ! உலகத்தில் ஒவ்வொருவரும் இப்படி உம்மைப்போல வேலை செய்ய ஆரம்பித்து விட்டால் சொர்க்க லோகம் கீழே இறங்கிப் பூமிக்கு வந்து விடும். இல்லாவிட்டால், இந்த உலகத்தில் உள்ள யாவரும் சொர்க்க லோகத்துக்குப் போய் விடுவார்கள் !" என்றான் ஏளனமாக.



சேகரின் குத்தலான வார்த்தைகளைத் துறவி புரிந்து கொள்ளாமலில்லை.

" பிச்சை யெடுப்பதுதான் நான் செய்யும் வேலை என்று தங்களிடம் கூறினேனா!" என்று சேகரைக் கேட்டார்.

" அப்படியானால், நீங்கள் பிச்சை எடுப்பது எதற்காக !"

" சாப்பிடுவதற்காக."

" பிச்சை எடுப்பதை ஜீவனமாகக் கொண்டிருக்கிறீர்கள் என்பதுதானே அதற்கு அர்த்தம்."

" இல்லை. நீங்கள் சாப்பிடும் உணவை நீங்களே சமைக்கின்றீர்களா !"

" இல்லை. என் வீட்டில் சமைக்கப்படுவதை நான் சாப்பிடுகிறேன்."

" நானும் அப்படித்தான் உங்களுக்காக உங்கள் மனைவி சமைப்பதை நீங்கள் சாப்பிடுகிறீர்கள். எனக்காக என் தாய் சமைப்பதை நான் சாப்பிடுகிறேன்."

" உங்கள் தாயாரா ! அவள் யார் !"

" எனக்கு இந்த வீட்டில் இப்போது உணவு அளித்த பெண்மணி என் தாயார் தான். எனக்குத் தினந்தோறும் பிச்சை போடும் பெண்மணிகள் யாவரும் என் தாய்மார்தான்."

துறவியின் இந்தப் பதில் சேகரின் மனதை உருக்கி விட்டது. தான் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் அந்தத் துறவி சிறிதும் தயக்கமின்றிப் பதில் அளித்தது சேகருக்கு வியப்பாக இருந்தது. அந்தப் பதில்களில் பல தத்துவங்கள் அடங்கியிருப்பதையும் சேகர் கவனிக்கத் தவறவில்லை. ' இவர் ஒரு விசித்திரத் துறவியாக இருக்கிறாரே ! என்று மனதுக்குள் சொல்

விக் கொண்டான். அவனுக்கு மேலும் துறவியின் வாயைக் கிண்ட வேண்டும் என்று தோன்றியது.

"ஆமாம், நான் சாப்பிடுவதற்காக என் பணத்தைச் செலவழிக்கிறேன். நீங்கள் அவ்வாறு செலவழிக்கிறீர்களா!" என்று கேட்டான்.

"நானும் பிச்சை வாங்குவதற்குப் பிரதியாக ஓர் உதவி செய்கிறேன்."

"என்ன உதவி செய்கிறீர்கள்!"

"உலகத்தின் க்ஷேமத்துக்காக உதவி புரிகிறேன்."

"பேஷ்! உமது வேஷத்துக்குத் தகுந்த இந்தப் பேச்சை எங்கே கற்றுக் கொண்டீர்கள்! உலக க்ஷேமத்துக்காக நீங்கள் உதவி புரிவதற்கு என்ன இருக்கிறது!"

"ஜனங்களுக்கு நன்மை செய்வதுதான்."

இதைக் கேட்டதும் சேகர் கேலியாகச் சிரித்தான். "இவ்விதம் பிச்சை யெடுப்பதுதான் ஜனங்களுக்கு நன்மை செய்வது போலும்!" என்றான்.

அதற்குமேல் சேகருடன் விவாதித்துக் கொண்டிருக்கத் துறவி விரும்பவில்லை. அவர் அங்கிருந்து புறப்பட யத்தனித்தார்.

"உணவுப் பஞ்சம் கடுமையாக இருந்து வரும் இக்காலத்தில் நீங்கள் இவ்வாறு பிச்சை எடுக்காமல் இருந்தால்தான் ஜனங்களுக்கு நன்மை செய்வதாகும், தெரிகிறதா!" என்று சொன்னான் சேகர் கடைசியாக.

"தங்களுக்கு எதுவும் சொல்ல உரிமை யுண்டு. நான் போகிறேன்" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டார் துறவி.

சேகர் திரும்பி வந்து நாற்காலியில் உட்கார்ந்தான். "இன்று இந்தப் பிச்சைக்காரனுக்குச் சரியான பாடம் கற்பித்தோம்" என்று அவன் மனம் திருப்தி அடைந்தது.

## 2

துறவிக்குத் தகுந்த பாடம் கற்பித்துவிட்டதாகச் சேகர் சந்தோஷம் அடைந்தானென்றாலும் தன் சொந்த மனைவியே தன் வார்த்தைகளுக்கு மதிப்புக் கொடுக்காதது அவனுக்கு மிகுந்த வேதனையை உண்டாக்கியது.

சைலஜா அறிவிலி அல்ல, படிக்காதவளும் அல்ல. படித்தவளாயிருந்தும் கூட அவள் கோவிலுக்குப் போவது, பிச்சைக்காரர்களுக்கு 'இல்லை' என்று சொல்லாமல் ஏதாவது கொண்டு போய்ப் போடுவது போன்ற பண்டைய வழக்கங்களை அனுஷ்டிப்பது அவனுக்கு வெறுப்பைக் கொடுத்தது.

சேகர் அந்தப் பக்கத்தில் சோஷலிஸ்ட் தலைவர்களில் ஒருவனாக விளங்கினான். பிச்சை எடுப்பது சமுதாயத்துக்கு விரோதமான குற்றம் என்பது அவனுடைய அபிப்பிராயம். பிச்சை எடுப்பதைத் தடுக்கச் சட்டம் இயற்ற வேண்டும் என்றும் அவன் தான் செய்யும் பிரசங்கங்களில் எல்லாரும் தவறாமல் குறிப்பிடுவது வழக்கம்.

அவன் அவ்விதம் கூறியதை ஆதரிப்பதற்கு அறிகுறியாக நூற்றுக் கணக்கான ஜனங்கள் கரகோஷம் செய்வது உண்டு. அப்படியிருக்க அவன் மனைவி சைலஜாவே அவனுடைய மேற்படி அபிப்பிராயத்துக்கு நேர்மாறாக நடப்பதென்றால்..!

பிச்சைக்காரர்களுக்கு எதுவும் கொடுக்கக் கூடாது என்று இதற்கு முன் சேகர் பல தடவை கண்டித்திருக்கிறான். அன்றும் அவள் தன் பேச்சை லட்சியம் செய்யாமல் பிச்சைக்காரனுக்குச் சோறு கொடுத்தாள் அல்லவா! அவளுக்கும் பாடம் கற்பிக்க வேண்டும் என்று நினைத்தான்.

இந்த உலகத்தில் சேகருக்கு மிகவும் கஷ்டமான காரியம் சைலஜாவிடம் கடிந்து பேசுவது தான்! அவளுடைய அழகைப்போல் அவளது குணமும் அமைந்திருந்தது. அவளைக் கடிந்துகொள்ள வேண்டும் என்று நினைத்துக் கொண்டு அவள் முன்னே வருவான். சைலஜாவின் வசீகரமான தோற்றமும், புன்முறுவலும், களங்கமற்ற சுபாவமும், இனிய வார்த்தைகளும் அவனது அந்த எண்ணத்தைத் தவிடுபொடியாக்கி விடும்!

நாற்காலியில் உட்கார்ந்தபடியே இவ்வாறு சிந்தனைகளில் ஈடுபட்டிருந்த சேகருக்குப் பின்னால் வளையல்கள் குலுங்கும் சப்தம் கேட்டது. அவ்வாறு சப்தம் கேட்கும் போதெல்லாம் திரும்பிச் சைலஜாவைப் பார்த்துப் பரவசம் அடையும் சேகர் இன்று திரும்பிப் பார்க்காமல் அலட்சியமாக உட்கார்ந்திருந்தான்.

"இன்று என் பேரில் உங்களுக்கு ரொம்பவும் கோபம் போலிருக்கிறது!" என்றாள் சைலஜா.

"உன்மீது நான் கோபித்துக் கொள்வதால் என்ன பலன்!" என்று சேகர் அலுத்துக் கொண்டான்.

"எதற்காகக் கோபம் என்பதைச் சொல்லக் கூடாதா!"

"சொன்னால் நீ கேட்கப் போகிறாயா! சொல்லி விட்டு நான் ஏன் அவமானப்பட வேண்டும்!"

சேகரின் கோபத்துக்குக் காரணம் என்ன என்பதை அவள் தெரிந்து கொண்டாள். "இந்த அற்ப விஷயத்துக்காக இவ்வளவு தூரம் மனதைக் கஷ்டப் படுத்திக் கொள்ளலாமா!" என்று சைலஜா சேகரின் கையைப் பிடித்துக்கொண்டு கேட்டாள்.

"சைலஜா, கையை விடு. இது அற்ப விஷயமல்ல. பிச்சை யெடுப்பதைப் பெருங் குற்றமாகக் கருத வேண்டும் என்றும் அதை நிறுத்திவிட வேண்டும் என்றும் நான் பொதுக் கூட்டங்களில் கதறி வருகிறேன். நீ என்னடாவென்றால், என் பேச்சை அர்த்தமற்ற வெறும் ஆடம்பர வார்த்தைகளாகச் செய்து விடுகிறாய். என் கொள்கையை என் சொந்த வீட்டிலேயே அமுலுக்குக் கொண்டு வர முடியவில்லை!"

"நாம் சாப்பிடுவதில் சிறிதளவு பசியால் வாடும் ஏழைக்குக் கொடுப்பதில் என்ன தவறு!"



"எதற்காகக் கொடுக்க வேண்டும்! ஒருவன் நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்துச் சம்பாதிப்பது, மற்றொருவன் பிச்சை யெடுக்கும் வியாஜத்தில் வந்து அதை அடித்துக்கொண்டு போவதா!"

"இருப்பவர்கள் இல்லாதவர்களுக்குக் கொடுப்பது என்பது பண்டைய காலத்திலிருந்து சிறந்த தர்மமாகக் கருதப்பட்டு வருவது உங்களுக்குத் தெரியாததா!"

"இத்தகைய மூடப் பழக்க வழக்கங்களினால் தான் நமது தேசம் இன்று இந்தக் கேவலமான நிலைக்கு வந்திருக்கிறது. இதனால்தான் உழைக்காமல் தர்மத்தின் பெயரால் தடிதத்தமாக வாழும் பிச்சைக்காரர்களின் தொகை நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது" என்று ஆத்திரத்துடன் கூறினான் சேகர்.

"யாராயினும் ஏழைகளிடத்தில் இரக்கமும் ஜீவகாருண்யமும் வேண்டாமா!"

"அதற்காக வாசலில் வந்து நிற்கும் சோம்பேறிகளுக்கெல்லாம் அள்ளி அள்ளிக் கொடுத்துக் கொண்டே இருப்பதா!"

இவ்வாறு கூறிய சேகருக்கு என்ன பதில் சொல்லுவதென்று சைலஜாவுக்குத் தெரியவில்லை. முதலிலேயே ஒரே வார்த்தையில் சேகரை வாயடைத்துப் போகும்படி செய்ய சைலஜாவினால் முடியும். ஆனால் அவ்விதம் செய்ய அவளுக்கு மனம வரவில்லை. எனினும் இப்போது வாதம் முற்றிவிட்டதால் அவளுக்கு அவ்வாறு செய்வதைத் தவிர வேறு வழி யிராமற் போய்விட்டது!

"இப்போது இப்படி யெல்லாம் பேசும் நாங்களும் ஒரு காலத்தில் வீடு வீடாகச் சென்று சாப்பாடு போடும்படி கெஞ்சவில்லையா!"

இந்த வார்த்தைகள் சேகரின் ஹிருதயத்தில் பாணங்களைப் போல் தைத்தன.

"ஆமாம், கெஞ்சினேன். அதனால்தான் என்னைப் போல் யாரும் கெஞ்சக்கூடாது என்று அடித்துக் கொள்கிறேன். அவ்விதம் கெஞ்சுவதில் எவ்வளவு கஷ்டமும் துன்பமும் இருக்கின்றன, தெரியுமா!"

"அப்படியானால் ஒருவரும் பிச்சை யெடுக்காமல் வாழும்படியான நிலைமையை உண்டாக்குங்கள். அதை விட்டு விட்டுப் பிச்சை கொடுப்பவர்களை ஏன் தடுக்கிறீர்கள்!"

"சைலஜா! உனக்கு எவ்வளவு சொன்னாலும் தெரியாது" என்றான் சேகர் கடைசியாக.

அதற்குமேல் அவன் எதுவும் பேசுவதற்குத் தயாராக இல்லை என்பது அவனது வார்த்தைகளிலிருந்து தெரிந்தது.

சைலஜாவும் தான் படபடப்பாக வார்த்தைகளைக் கொட்டி விட்டதற்காக மிகவும் வருந்தினாள். அவள் கண்கள் கலங்கின.



"நேற்று ராமுவை நான் பார்த்தேன். அவன் என்னைப் பார்க்கவில்லை!"

"எனக்குத் தெரியும். ராமுவே நேற்று என்னிடம் சொல்லி விட்டான்!"

"நான் உங்களுடன் ஏதாவது பேச வேண்டும் என்பதற்காகப் பதிலுக்குப் பதில் சொல்லி விட்டேன். என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்.... பாவம்! உங்களுக்கு ஏழு எட்டு நாட்களாக இரவில் சரியான தூக்கம் கூட இல்லை. படுத்துக் கொண்டு தூங்குங்கள். நான் கால்களைப் பிடித்து விடட்டுமா!" என்றாள் சைலஜா களங்கமற்ற அன்புடன்.

அவளுடைய இந்த வார்த்தைகள் சேகரின் மனப்புண்ணுக்கு அமுதம் போல் இருந்தன. அவன் கோபமெல்லாம் இருந்த இடம் தெரியாமல் நொடிப் பொழுதில் மறைந்து விட்டது.

## 3

சேகருக்குத் தூக்கம் வரவில்லை. கண்களை மூடிக் கொண்டு படுத்திருந்தான். என்றாலும் அவன் மனதில் பல்வேறு சிந்தனைகள் ஊசலாடிக் கொண்டிருந்தன. சைலஜாவின் வார்த்தைகள் வேறு பழைய ஞாபகங்களைக் கிளறி விட்டன.

இன்று சுக போகங்களுடன் வாழும் சேகர் ஒரு காலத்தில் வீடு வீடாகச் சென்று பிச்சை எடுத்தவன் தான்! அந்தக் காலத்தில் தான் பட்ட கஷ்டங்களை நினைக்கும்போதெல்லாம் சேகருக்குக் கண்ணீர் ததும்பும்; அவன் மனம் வேதனைக்கு உள்ளாகித் தவிக்கும்.

பதினைந்து வருஷங்களுக்கு முன் அவன் ஹைஸ்கூலில் வாசித்துக் கொண்டிருந்தான். அவன் குழந்தைப் பருவத்திலேயே பெற்றோரை இழந்த அநாதை. எனவே, தினந்தோறும் வீடு வீடாகச் சென்று பிக்ஷை எடுத்துச் சாப்பிடுவது வழக்கம்.

ஒரு நாள் சேகர் வழக்கத்துக்கு மாறாக, சாப்பிடாமலேயே பள்ளிக்கூடத்துக்குச் சென்று விட்டான். பிறகு மத்தியானம் பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும் பிக்ஷை யெடுக்கச் சென்றான். வழக்கமாகச் சாப்பாடு கொடுக்கும் வீடுகளில் "இன்று ஏன் நாழியாகி விட்டது! வேறு எங்கேயாவது பார்த்துக் கொள்" என்று சொல்லி விட்டார்கள்.

சேகருக்குப் பசி தாங்க முடியவில்லை. கடும் வெய்யில் வேறு தகித்தது. கடைசியாக ஒரு வீட்டுக்குப் போனான். "அடடா! இவ்வளவு நாழிகை கழித்து வந்திருக்கிறாயே! நாங்கள் சாப்பிட்டாகி விட்டது. நாளை வா!" என்று சொல்லிவிட்டார்கள்.

அப்போது சேகர் இருந்த நிலைமை அவர்களுக்கு எப்படித் தெரியும்!

சேகர் தள்ளாடிக் கொண்டே திரும்பிச் செல்ல முற்பட்டான். 'சற்று இரு" என்ற ஓர் இனிமையான குரல் கேட்டது.

உடனே ஒரு சிறுமி நாலு மாம்பழங்களை எடுத்துக் கொண்டுவந்து, "இன்றைக்கு இதைச் சாப்பிடு" என்று கொடுத்தாள்.

தள்ளாடிக் கொண்டிருந்த சேகருக்கு, யாரோ ஒரு தேவ கன்னிகை கற்பக விருட்சத்திலிருந்து பறித்த கனிகளைக் கொடுப்பதுபோல் தோன்றியது.

அவற்றைப் பிக்ஷாபாத்திரத்தில் வாங்கிக் கொண்டான். அந்தச் சிறுமியின் முகத்தை நன்றியறிதலுடன் பார்த்தான்.

அவ்வளவுதான்! அவனை யறியாமல் அவன் கண்களிலிருந்து பொல பொலவென்று கண்ணீர் உதிர்ந்தது. உடனே அந்தச் சிறுமி உள்ளே ஓடிப்போய்த் தன் தாயாரை அழைத்து வந்தாள்.

சேகரின் பரிதாபகரமான வரலாற்றைக் கேட்டதும் அந்தச் சிறுமியின் தாயாருக்கு அவன்மீது மிகுந்த இரக்கம் உண்டாயிற்று.

"நீ ஏன் இப்படி பிசைகு எடுக்க வேண்டும்! நாளை முதல் ஒவ்வொரு வேளையும் எங்கள் வீட்டிலேயே எங்களுடன் சாப்பிட்டுப் போ. நீ சங்கோசப் படாமல் தாராளமாக வரலாம்" என்றான்.

அன்று சேகருக்கு மாம்பழம் கொடுத்த சைலஜாதான் இன்று அவனுடைய மனைவியாக விளங்குகிறாள்!

உடனே சேகர் கண்களைத் திறந்தான். பக்கத்தில் படுத்துக் கொண்டிருந்த சைலஜாவின் முகத்தை அன்புடன் பார்த்தான்.

"சைலஜா அன்றிருந்தது போலவே இருக்கிறாள். குணத்திலும் மாறுதலில்லை. அவளுடைய சாந்தமும் இரக்க சுபாவமும் அவளுடைய இயற்கையான அழகுக்கு அழகு செய்வதுபோல் இருக்கின்றன" என்றது அவன் மனம்.

தர்க்க ரீதியாகத் தன்னுடைய வாதங்கள் சரியாக இருக்கலாம். ஆனால் சைலஜாவின் வாதங்கள் தர்மத்தை, ஜீவகாருண்யத்தை அடிப்படையாகக் கொண்டவை என்று அவனுக்குத் தோன்றியது.

அவளை எழுப்பாமல் சேகர் வீட்டிலிருந்து புறப்பட்டான். அந்தத் துறவியை மறுபடியும் பார்த்துப் பேசவேண்டும் என்ற ஒரு விசித்திர எண்ணம் அவனை உந்தித் தள்ளியது. பிச்சை வாங்கிக் கொண்டு சென்ற ஒரு பிச்சைக்காரனை எதற்காக மறுபடியும் பார்க்க வேண்டும்! அது ஒரு பைத்தியக்கார எண்ணம் தான்! இருந்தாலும் அதை அவனால் அடக்கிக் கொள்ள முடியவில்லை.

தெருவில் போகும்போது எங்கேயாவது அந்தத் துறவி நிற்கிறாரா என்று சுற்று முற்றும் பார்த்துக் கொண்டே சென்றான்.

## 4

அந்த ஊர் குளக்கரையில் உள்ள அரச மரத்தடியிலே துறவி போய் உட்காருவதைச் சேகர் கவனித்தான்

துறவி தமது குவளையிலிருந்த சோற்றை சாப்பிட யத்தனிக்கையில், ஒரு நாயும் இரண்டு நாய்க் குட்டிகளும் அவர் அருகில் வந்து வாலை ஆட்டிக் கொண்டு நின்றன. துறவி அவற்றை அடித்து விரட்டவில்லை. ஒரு கவளம் அன்னத்தை எடுத்து அதன் அருகில் போட்டார். பிறகு மற்றும் ஒரு கவளத்தை எடுத்துப் போட்டார். நாயும் குட்டிகளும் அதை ஆர்வத்துடன் தின்றன.

துறவி மறுபடியும் ஒரு கவளம் அன்னத்தை எடுத்து வாய்க்கு அருகில் கொண்டு செல்லுகையில், அங்கு வந்த ஒரு ஏழைக் கிழவி துறவியிடம் கையை நீட்டிக் கொண்டு கெஞ்சுவதைச் சேகர் பார்த்தான்.

அவன் அப்போது கண்ட காட்சியை அவனால் நம்பவே முடியவில்லை. மேற்படி துறவி லேசாகச் சிரித்துக் கொண்டே குவளையிலிருந்த அன்னத்தையெல்லாம் அந்தக் கிழவியின் கிழிந்த சேலைத் தலைப்பில் கொட்டி விட்டார். பிறகு அவர் குளத்தில் இறங்கிக் குவளை நிறையத் தண்ணீரை எடுத்துக் குடித்துவிட்டு, அரசமரத்தடியில் தன் மேல் வஸ்திரத்தைக் கீழே போட்டுக் கொண்டு நிம்மதியாகப் படுத்தார்!

அவ்வழியாக வேறு எங்கேயோ செல்லுபவன் போல் வந்த சேகரைக் கண்டதும் துறவி கைகூப்பி வணங்கினார்.

"பசிக்கிறது என்று சாப்பாடு வாங்கிக் கொண்டு வந்தீர்கள். நாய்க்கும் அந்தக் கிழவிக்கும் கொடுத்து விட்டீர்களே; நீங்கள் சாப்பிடவில்லையா!" என்றான் சேகர்.

அவன் தன் உணர்ச்சியை வெளிக்காட்டாமல் அடக்கிக் கொள்ள முயற்சித்தான்.

"என்ன செய்கிறது பாருங்கள்! வாயில்லாத இந்த ஜீவன் பல்லைக் காட்டும்போது நான் எப்படிச் சாப்பிட முடியும்! அந்த ஏழைக் கிழவி கேட்கும்போது நான் எப்படி 'இல்லை' என்று சொல்வது!" என்றார் துறவி.

"நீங்கள் ஏழை இல்லையா!"

"நான் ஏழைதான். அவர்கள் என்னைவிடப் பரம ஏழைகளா யிருக்கிறார்களே! பிச்சை யெடுக்க என் உடம்பில் சக்தி யிருக்கிறது. அவர்களுக்கு அதுகூட இல்லை. இரண்டொரு வேளை பட்டினி கிடந்தால் என் உடம்பு தாங்கும். ஆனால் பாவம்! அவர்களைப் பாருங்கள்."

சேகரின் கண்கள் ஆச்சரியத்தினால் அகல விரிந்தன.

"உண்மையான சோஷலிஸ்டு இந்த மகான்! அல்லது பிரசங்க மேடையில் வார்த்தைகளைத் தாராளமாக அள்ளி வீசும் நானா!" என்று அவன் தன்னைத் தானே கேட்டுக் கொண்டான்.

கடைசியாக அந்தத் துறவியை ஒரு கேள்வி கேட்க வேண்டும் போல் தோன்றியது அவனுக்கு.

"ஒவ்வொரு வேளையும் நீங்கள் பிச்சை யெடுப்பதை இப்படியே கொடுத்துக் கொண்டிருந்தால், நீங்கள் உயிர் வாழ்வதற்கு என்ன செய்வீர்கள்!"

"பிறரைச் சாகடித்து நான் உயிர் வாழ்வதைக் காட்டிலும் பிறர் உயிர் வாழ்வதற்காக நான் சாவதுமேல் அல்லவா!" என்றார் துறவி!

"நீங்கள் சாதாரணத் துறவி அல்ல; ஓர் உண்மையான ஞானி" என்றது அவன் மனம்.

உணர்ச்சிப் பெருக்குடன் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்ட சேகர் சிறிது தூரம் சென்றதும், "சைலஜா! உன்னை மனைவியாக அடைய நான் எத்தனை ஜன்மங்களில் எவ்வளவு பாக்கியம் செய்தேனோ!" என்று தனக்குள்ளேயே பரவசத்துடன் சொல்லிக் கொண்டான்!






## 14. வேதா எங்கே?

பொன்னியும் சிவப்பிரகாசமும் ராஜாளி மடத்தை நெருங்கியதும் சிவப்பிரகாசம் அந்தப் பெரிய கட்டிடத்தைப் பார்த்து, "இதுதானா அந்த ராஜாளி மடம்!" என்று வியப்போடு கேட்டு விட்டுத் திகைத்துப்போய் நின்று விட்டார். தனிமையான இடத்தில் இருந்த அந்தப் பழமையான கட்டிடம் பார்வைக்கே பயங்கரமானதாக இருந்தது. அந்தக் கட்டிடம் மனிதர்கள் வாசம் செய்யக் கூடியதாகவே தோன்றவில்லை. அப்படியிருக்கும்பொழுது அந்தக் கட்டிடத்தில் சில ஸ்திரீகள் மட்டுந்தான் வாசம் செய்கிறார்கள் என்றால் அது மிகவும் அனிசுரமான காரியம்தானே!

"ஆமாம், இதுதான் ராஜாளி மடம்!" என்று சொல்லிவிட்டுச் சிவப்பிரகாசத்தின் முகத்தை உற்றுப் பார்த்தாள் பொன்னி.

"அட கடவுளே! இது என்ன இடம்! இப்படிப்பட்ட இடத்திலா என் பெண் வேதா பதினேழு வருஷங்களாக இருக்கிறாள்!" என்றார் சிவப்பிரகாசம் ஆச்சர்யத்தோடும் வெறுப்போடும்.

"ஆமாம்!" என்றாள் பொன்னி பரிகாசமாகச் சிரித்துக் கொண்டே.

"எனக்கு ஆச்சர்யமாக இருக்கிறது. அவர்களுக்கு இன்னும் பைத்தியம் பிடிக்கவில்லையா!" என்று சொல்லிவிட்டு அவர் ஒரு பெருமூச்சு விட்டபடியே, "ஹும்! மரகதம் ஏற்கனவேயே ஒரு பைத்தியக்காரி. அதனால் தான் அவள் வசிப்பதற்கு இந்த மாதிரியான இடத்தைத் தேடிப் பிடித்திருக்கிறாள்" என்றார்.

பொன்னி அவருக்கு எவ்விதமான பதிலும் சொல்லவில்லை. அந்தக் கட்டிடத்தின் வெளி வாசற் கதவு சாதாரணமாகத் தான் சாத்தப்பட்டிருந்தது. அதைத் திறந்து கொண்டு அவள் உள்ளே சென்றாள். அவளுக்குப் பின்னே சிவப்பிரகாசம் வந்து கொண்டிருந்தார்.

'செங்கம்மா என்பவள் யார்!' என்று அந்த மனிதர் கேட்டதிலிருந்து அவளை அந்த மனிதருக்குத் தெரியாது, அவளை அந்த மனிதர் சந்தித்ததுமில்லை என்று பொன்னிக்கு நன்கு விளங்கியது. இப்பொழுது முதன் முதலில் அவளைத் தான் அவர் சந்திக்கும்படி நேரும். அவர்கள் இருவரும் சந்திப்பதே ஒரு விநோத நாடகமாயிருக்கும்.

அதை நேரில் பார்த்து ரஸிக்க விரும்பிய பொன்னி, முன்னே நடந்து சிவப்பிரகாசத்துக்கு வழிகாட்டி அழைத்துப் போனாள்.

அந்த வீட்டின் வெளிக் கூடத்தில் செங்கம்மா நின்று கொண்டிருந்தாள். அவள் பொன்னிக்குப் பின்னால் ஒரு மனிதர் வருவதைப் பார்த்ததும் திகிலடைந்தாள். அவள் உதடுகள் துடித்தன. கண்களில் கோபக் கனல் பறந்தது. "பொன்னி, இதென்ன அர்த்தம்! யார் அந்த மனிதர்!" என்று படபடப்போடு கேட்டாள்.

"மனிதரல்ல இவர். பேய்..." என்றாள் பொன்னி இயற்கையாகவும் அமைதியாகவும் பதில் சொல்லுகிறவள் போல.

செங்கம்மாவின் கோபம் நிலை தவறிய வேகத்திற்குப் போய்விட்டது. அவள் ஆத்திரத்துடன், "மரியாதை இல்லாமல் பேசாதே! யார் இந்த மனிதர்! கண்ட மனிதர்களையெல்லாம் நீ எப்படி இங்கே அழைத்து வரலாம்!" என்றாள்.

"உண்மையாகப் பேய்தான். பதினேழு வருஷத்துக்கு முன்னாலே இறந்து போனவருடைய ஆவி..." என்றாள் அஞ்சாமல் பொன்னி.

செங்கம்மா பொன்னியைச் சுட்டு விடுவது போல் பார்த்தாள். அவளுக்கு ஒருபுறம் கோபம் வந்தாலும் பொன்னியின் வார்த்தைகள் குழப்பத்தையும் வியப்பையும் கொடுத்தன. பொன்னி அவளை மேலும் சோதிக்க விரும்பவில்லை. ஆகவே, "இவர்தான் வேதாவின் தகப்பனார். உங்களுக்குத் தெரியாது போயிருக்கிறது!" என்று அந்த மனிதரை அறிமுகம் செய்து வைத்தாள். இந்த வார்த்தை செங்கம்மாவை அப்படியே ஸ்தம்பிக்கச் செய்து விட்டது. அந்தச் சமயத்தில் அவள் வாய் திறந்து பேசக் கூடச் சக்தியற்றவளாகிவிட்டாள். 'அங்கே நிற்கும் மனிதன் உண்மையிலேயே ஒரு மனிதன் தானா அல்லது பேயே தானோ!' என்று சந்தேகம் கூட அவளுக்கு ஏற்பட்டிருக்கவேண்டும். "என்ன நிஜமாகவா!" என்று தட்டுத் தடுமாறியவாறே கேட்டாள்.

"ஆமாம், உண்மைதான்! நீதானா அந்தச் செங்கம்மா என்பவள்!" என்று குரலில் கோபம் தொனிக்கக் கேட்டார் சிவப்பிரகாசம்.

"ஆமாம்!" என்றாள் செங்கம்மா மிகவும் பதட்டத்தோடு.

"சரிதான்! எந்த எமன் உன்னிடம் வந்து நான் இறந்து விட்டேனென்று ஊரெல்லாம் பிரசாரம் செய்யச் சொன்னான்!" என்று கேட்டார்.

செங்கம்மா அவருக்கு எவ்விதமான பதிலும் சொல்லவில்லை. அவளுக்கு ஏற்பட்ட திகைப்பிலிருந்து இன்னும் அவள் தன்னை மீட்டுக் கொள்ளவில்லை என்பது நன்றாகத் தெரிந்தது.

"ஹும். ஒரு வேளை மரகதம் நான் இறந்து விட்டேனென்று ஊரிலுள்ளவர்களெல்லாம்

நினைத்துக் கொள்ள வேண்டுமென்பதற்காகக் கிளப்பிவிட்ட வதந்தியாக இருக்கலாம். என்னுடைய பெண் வேதாளை எப்பொழுதும் தன்னுடைய அதிகாரத்தின் கீழே அடக்கி வைத்திருக்க வேண்டும் என்பதற்காகக் கிளப்பிவிட்ட கதையாக இருக்கலாம். ஆனால் நான் உயிரோடு தான் இருக்கிறேன். இதை நீயும் பார்க்கலாம்; அந்த மரகதமும் பார்த்துக் கொள்ளலாம். போகட்டும். மரகதம் எங்கே!'' என்றார் கடுமையான குரலில் சிவப்பிரகாசம்.

''எசமானி அம்மாள்தானே! அவர்கள் தன் அறையில்தான் எப்போதும் இருப்பார்கள். என்னோடு வாருங்கள். அழைத்துக் கொண்டு போகிறேன்'' என்றாள் பொன்னி செங்கம்மாவின் பதிலை எதிர்பார்க்காமலேயே.

''எங்கே அந்த அறை! அதை எனக்குக் காட்டு!'' என்றார் சிவப்பிரகாசம். பொன்னி அந்த அறையை நோக்கி நடந்தாள். அவளைப் பின் தொடர்ந்தார் சிவப்பிரகாசம்.

அப்பொழுதுதான் செங்கம்மா சுய உணர்வு வந்தவள்போல் சட்டென்று பாய்ந்தோடிப் பொன்னியை மறித்து, ''நில்!'' என்று கத்தினாள். அவள் கண்களில் கோபப் பொறி பறந்தது. இரும்பு உலக்கை போன்ற அவளுடைய கை பொன்னியை கெட்டித் தள்ளியது. ''இந்த மனிதனை எஜமானியம்மாளிடம் அழைத்துச் செல்ல உனக்கு என்ன துணிச்சல்! நீ இருக்க வேண்டிய இடம் சமையலறை. போ, அங்கே! நான் அழைத்துக் கொண்டு போகிறேன், இந்த மனிதரை!'' என்று கர்ஜித்தாள்.

''நீ என்னை அழைத்துக் கொண்டு போக வேண்டாம். நீ மரியாதையோடு உன் வேலையைக் கவனித்துக்கொண்டு போ. மரகதம் எங்கிருக்கிறாளோ, அங்கே இந்தப் பெண்ணே என்னை அழைத்துப் போகட்டும்'' என்று சிவப்பிரகாசம் செங்கம்மாவிடம் படபடப்போடு சொல்லிவிட்டு, ''எங்கே அந்த அறை! காட்டு!'' என்று பொன்னியைப் பார்த்து அதிகார தோரணையில் சொன்னார்.

''என்னால் முடியாது. நான் உங்களை அழைத்துக் கொண்டு போனால் அப்புறம் இந்தப் பேயிடமிருந்து தப்ப முடியாது'' என்றாள் பொன்னி உள்ளக் குமுறலோடு.

''நீ பயப்படாதே! மறுபடியும் அவள் உன் மீது கை வைத்தால் நான் பார்த்துக் கொள்கிறேன். இந்தப் பாழாய்ப் போன கட்டிடத்தில் ஏதோ கோரமான விளையாட்டெல்லாம் நடக்கிறது போலிருக்கிறது. கடவுள்தான் என்னை இங்கு கொண்டு வந்து சேர்த்தார். சரி, நீ போ!'' என்று பொன்னியைப் பார்த்துச் சொன்னார் சிவப்பிரகாசம்.

''அது முடியாது. எஜமானி யம்மாவிடம் உங்களை அழைத்துக் கொண்டு போக இவளை நான் அனுமதிக்க மாட்டேன்'' என்று சொல்லிப் பொன்னியின் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள் செங்கம்மா.

''சிவப்பிரகாசத்திற்குக் கோபமும் ஆத்திரமும் எல்லை கடந்து வந்தன. ''என்ன! அவளை அனுமதிக்க முடியாதா!'' என்று சொல்லிவிட்டுச் செங்கம்மாவின் கையைப் பிடித்துத் தன் முழு பலத்தையும் காட்டி உதறித் தள்ளினார். அந்த வேகத்தில் செங்கம்மா ஐந்து ஆறு அடி பின்னால் போய் விழுந்தாள். ''சரி! போ, நீ! மரகதம் எங்கே இருக்கிறாள், காண்பி!'' என்றார் சிவப்பிரகாசம்.

''என்னையா பிடித்துத் தள்ளினாய்! போக்கிரி! உனக்கு இதற்குச் சரியான தண்டனை கிடைக்கும்'' என்று உறுமிக் கொண்டே விழுந்த இடத்திலிருந்து எழுந்து முழங்காலிலும் தோளிலும் பட்ட அடியைத் துடைத்துக் கொண்டாள் செங்கம்மா.

சிவப்பிரகாசமும் பொன்னியும் அவளை லட்சியம் செய்யவே யில்லை. அவர்கள் முன் கூடத்தைத் தாண்டி உள்ளே போனார்கள்.

பொன்னி ஒரு அறையின் வாசற்படியில் வந்து நின்றபோது, ''இதுதானா அவள் இருக்கும் அறை!'' என்றார் சிவப்பிரகாசம்.

''ஆமாம், இதுதான்!'' என்றாள் பொன்னி.

கதவை மெதுவாகத் திறந்து கொண்டு சிவப்பிரகாசம் அந்த அறைக்குள் நுழைந்தார். மரகதம் ஒரு நாற்காலியில் அமர்ந்திருந்தாள். அவளுக்கு எதிரிலிருந்த மேஜை மீது பழைய காலத்து விளக்கு ஒன்று அடக்கமாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. சிவப்பிரகாசம் அந்த அறையில் நுழைந்ததும் எதிரிலிருந்த சுவரில் அவருடைய நிழலுருவம் விழவே, மரகதம் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். சிவப்பிரகாசம் மேஜைக்குச் சமீபமாகச் சென்று பூரணமாக ஒளி தரும் வண்ணம் விளக்கைப் பெரிதாக்கி விட்டார்.

பொன்னி அந்த அறைக்குள் நுழையவேயில்லை. ஒரு பக்கத்துக் கதவு மாத்திரம் திறக்கப்பட்டிருக்கும் அந்த அறையின் வாசற்படியில் நின்றவாறே,



உள்ளே என்ன நடக்கிறது என்பதை வியப்போடு பார்த்துக் கொண்டிருந்தாள்.

மரகதம் தன் எதிரில் வந்து நிற்கும் மனிதனை உற்று நோக்கினாள். கண நேரத்தில் தன் தேகத்தில் ஓடிக்கொண்டிருந்த ரத்தம் முழுவதும் ஹிருதயத்தில் வந்து தங்கிப் பாறையாகத் தோய்ந்து விட்டது போலத் தோன்றியது அவளுக்கு. அவள் முகம் சிவந்தது. அவள் கண்களில் ஒரு வெறுப்புக் குறி தோன்றியது. அவள் ஒரு கையை நாற்காலிப் பிடியில் ஊன்றியபடியே மெதுவாக எழுந்து ஏதோ சக்தியால் உந்தப்பட்டவள் போல் அந்த மனிதனுக்குச் சமீபமாக வந்து நின்றாள். அவளுடைய கண் பார்வை முழுவதும் அந்த மனிதன் மீதே இருந்தது. "நீயா.......!" என்று உறுமினாள் அடித் தொண்டையோடு.

"ஆமாம், நான்தான்!" என்றார் விறைப்பாகச் சிவப்பிரகாசம். அப்பொழுது அவர் உதட்டில் நயவஞ்சகமான சிரிப்பொன்று நெளிந்தது. மெதுவாக அவளுக்குச் சமீபமாக நெருங்கி வந்தார்.

"நில்லு! என் கிட்டே வராதே!" என்று சீறினாள் மரகதம். அப்பொழுது அவள் முகம் ரத்தம் வற்றியது போல் வெளுத்துப் பயங்கரமாக இருந்தது.

"மரகதம்! இத்தனை வருஷத்திற்குப் பின்னும் உன்னுடைய வரவேற்பு இப்படித்தானா இருக்க வேண்டும்!" என்று கேட்டார் சிவப்பிரகாசம்.

"வரவேற்பா.......!" என்று கோப உணர்ச்சி மீறக் குமுறினாள் மரகதம்.

சிவப்பிரகாசத்தைச் சந்தித்ததினால் முதலில் மரகதத்திற்கு ஏற்பட்ட அதிர்ச்சி தணிந்து விட்டது. அவள் பார்வையில் விஷம் தெறித்தது. "வரவேற்பா.......! நீ என்ன துணிச்சலோடு இங்கே வந்தாய்! உனக்கா வரவேற்பு! நீ பாதகன்; கொலைகாரன்!" என்றாள் உரத்த குரலில்.

சிவப்பிரகாசத்தின் முகம் வாட்ட மடைந்தது. "மரகதம்! ஏன்.......!" என்று ஏதோ தயங்கிய படியே அவர் சொல்ல நினைத்தபொழுது மறுபடியும் நாகம்போல் சீறினாள் மரகதம்.

"போ வெளியே, மரியாதையோடு! நீ மகா வஞ்சனைக்காரன், கொலைகாரன், பழிகாரன்......" என்று கூச்சலிட்டாள் மரகதம். வாசற்படிக்குச் சமீபமாக நின்றுகொண்டு இவற்றைப் பார்த்துக் கொண்டிருந்த பொன்னிக்கு ஏற்பட்ட திகைப்பில் மூச்சே நின்றுவிடும் போலிருந்தது.

"நீ என்ன துணிச்சலோடு இந்த வீட்டிற்குள் நுழைந்தாய்! மரியாதையோடு நீ திரும்பிப் போய்விடு. ஆமாம்! நீ எங்கிருந்து வந்தாயோ அங்கேயே திரும்பிப் போய்விடு" என்று எச்சரிக்கை செய்தாள் மரகதம்.

"மரகதம், கொஞ்சம் பொறுமையாக யோசித்துப் பார்......" என்றார் சிவப்பிரகாசம்.

"நான் பொறுமையாக யோசிப்பதற்கு ஒன்றுமில்லை. நான் பொறுமையாக இருந்துவிட்டேன். பொறுமையாக இருந்ததின் பலனையும் கண்டு விட்டேன். போதும்! பொறுமையாக இருந்ததால் தான் நீ என் தங்கையைக் கொன்றாய்......உன்னுடைய நயவஞ்சகமான வார்த்தை, உன்னுடைய போலி வேஷம் இவைகளினால் எங்களுடைய வாழ்க்கையே பாழாகி விட்டது. இன்னுமா எங்களுக்குப் பொறுமை வேண்டும்...!" என்று படபடப்போடு சொல்லி நிறுத்தியவள் மறுபடியும் ஒரு பெருமூச்சுடன், "ஹூம்! ஆனால் பழிதீர்க்கும் கடமை என்னைச் சேர்ந்ததென்று கடவுள் சொல்லிக் கொண்டிருக்கிறார். அவருடைய பார்வையிலிருந்து நீ தப்ப முடியாது. ஆமாம்! என் தங்கை கமலாவின் ஆவிகூட உன்னைப் பழி வாங்க எங்காவது தேடிக் கொண்டுதானிருக்கும். ஆம்! சாரதாவின் ஆவிகூட உன்னைத் தேடித் திரியும்......" என்று சொல்லி நிறுத்தினாள்.

"சாரதாவின் ஆவியா!" என்று துடித்துக் கொண்டே கேட்டார் சிவப்பிரகாசம்.

"ஆமாம்! சாரதாவின் ஆவிதான். அவர்களெல்லாரும் இந்த உலகத்தில் பெண்ணாய் இருந்து பொறுமையோடு கஷ்டங்களை அனுபவிப்பதை விட ஆவியாக மாறித் தன் வாழ்வைக் குலைத்தவர்களையெல்லாம் பழிக்குப் பழி வாங்குவது தானே நல்லது! அதற்காகவே அவர்கள் போய் விட்டார்கள்" நீ உடனே இந்த வீட்டை விட்டுப் போய்விடு. மறுபடியும் இந்த வீட்டில் காலடி எடுத்து வைக்காதே!..." என்றாள் மரகதம்.

சிவப்பிரகாசம் நின்ற இடத்திலேயே அசையாமல் சில நிமிடம் நின்றுகொண்டிருந்தார். அவர் முகம் வெளுப்படைந்து அதில் சவக்களை சொட்டியது. பொன்னி மரகதத்திற்கும் சிவப்பிரகாசத்திற்கும் நடந்து கொண்டிருந்த வாக்குவாதத்தை அந்த அறையின் வாசற்படியில் கதவைப் பிடித்த வண்ணமே நின்று கேட்டுக் கொண்டிருந்தாள். ஒன்றும் புரிந்துகொள்ள முடியாத வகையில் அவளுக்குக் கூடச் சிறிது திகைப்பு ஏற்பட்டது.

"மரகதம், நான் போக முடியாது! ஆமாம், நான் இந்த இடத்தை விட்டுப் போக முடியாது. நான் வேதாவைப் பார்ப்பதற்காகத்தான் இங்கு வந்தேன். அவளை நான் இப்பொழுதே பார்த்தாக வேண்டும். அதற்கு ஏற்பாடு செய்" என்றார் சிவப்பிரகாசம் அழுத்தமான குரலில்.

"அது முடியாது. அவளை நீ ஒரு பொழுதும் பார்க்க முடியாது. அவள் குழந்தையாக இருக்கும் போதே அவளை நீ இரக்கமில்லாமல் உதறிவிட்டுப் போய்விட்டாய். அவளுடைய தாயையும் கொன்று விட்டாய். அப்படிப்பட்ட கிராதகன் கண்ணில் அவள் படுவது கூடப் பாவம். மரியாதையாகச் சொல்கிறேன். நீ இந்த இடத்தை விட்டு உடனேயே போய் விடு. இல்லாவிட்டால்......" என்றாள் மரகதம் கண்டிப்பான குரலில்.

"முடியாது. வேதாவைப் பார்க்காமல் இந்த வீட்டை விட்டு நான் ஒரு அடி கூட எடுத்து வைக்கமாட்டேன்......" என்றார் சிவப்பிரகாசம்.

மரகதம் பல்லைக் கடித்துக்கொண்டே அவரை உற்று நோக்கினாள். அப்பொழுது அவள் கண் பார்வையில் கொலைக்கும் அஞ்சாத கொடூரம்தான் தாண்டவமாடியது. சிவப்பிரகாசம் அவள் நிலையைக் கண்டு சிறிதும் அச்சப்படாதவர் போல் ஒரு தடவை கனைத்துக்கொண்டு, "என் பெண்ணை நான் பார்க்காத வரையில் இந்த இடத்தை விட்டு அசையவே மாட்டேன். நீ என்ன செய்து விடுவாய்! அதைத்தான் பார்க்கலாமே!" என்றார்.

அந்த ஆவேசம் மிகுந்த சம்வாதங்களைக் கேட்டுக் கொண்டிருந்த பொன்னியின் கையைப் பிடித்து யாரோ அப்பால் தள்ளவே, அவள் நடுங்கி விட்டாள். தள்ளியவள் வேறு யாருமில்லை. செங்கம்மாதான். அவள் பொன்னியை வெட்டி விழுங்கி விடுபவள் போல் பார்த்து விட்டு அந்த அறைக்குள் நுழைந்தாள். பாவம், முதலில் மரகதத்தின் அறைக்குச் சிவப்பிரகாசத்தை அழைத்து வர முயற்சித்தபோது பொன்னியைத் தடுத்த செங்கம்மாவைச் சிவப்பிரகாசம் கீழே தள்ளிவிட்டதில் அவளுக்கு முழங்காலில் நல்ல அடி பட்டிருந்தது. இருப்பினும் எஜமானியின் அறையில் நடக்கும் பலமான வாக்குவாதம் செங்கம்மாவைச் சும்மா யிருக்க விடவில்லை. அவள் சிரமத்தோடு நொண்டி நொண்டி

நடந்துகொண்டே மரகதத்தின் அறைக்கு வந்து விட்டாள். அவளுக்குத் தன்னைக் கீழே பிடித்துத் தள்ளிவிட்ட சிவப்பிரகாசத்தை எப்படியாவது பழி தீர்த்துக்கொள்ள வேண்டுமென்ற ஆத்திரம் மிதமிஞ்சி இருந்தது. ஆனால் அந்த மனிதனிடம் நெருங்குவது சிறிது அபாயம் என்பதை முதலில் ஏற்பட்ட அனுபவத்திலிருந்தே அவள் உணர்ந்திருந்தாள். இருப்பினும் அந்த மனிதனிடம் தணிந்து போக அவளுக்கு இஷ்டமில்லை. எப்படியாவது வஞ்சனையாக அவனைப் பழி வாங்கிவிட வேண்டுமென்றுதான் அவள் நினைத்தாள். "மரியாதையாக எங்கள் எஜமானி அம்மாளின் அறையை விட்டு வெளியே போய்விடு! போக்கிரி! கொலைகாரா!" என்று உறுமினாள்.

"ஏ, பிசாசே! நீ மறுபடியும் இங்கே வந்து விட்டாயா! மரியாதையாக நீ வாயை அடைத்துக்கொண்டிரு. நாங்கள் இருவரும் பேசிக் கொண்டிருக்கும்போது உனக்கு என்ன இங்கே வேலை!" என்றார் சிவப்பிரகாசம் ஆத்திரத்துடன்.

"எனக்கு என்ன வேலையா! எனக்கு நீ எவ்வளவு கேவலமானவன், கொலைகாரன், துரோகி, மிருகத்தை விட மட்டமானவன் என்பதெல்லாம் தெரியும். எங்கள் எஜமானியுடன் உன்னைத் தனியாகப்பேச விட்டுவிட்டு நான் சும்மா இருக்க முடியாது. நான் உனக்குத் துளிக்கூடப் பயப்பட மாட்டேன். மரியாதையாக இந்த இடத்தை விட்டுப் போய்விடு" என்று சீறினாள் செங்கம்மா.

"நீ மரியாதையாகப் போக மாட்டாயா! மரியாதை தவறி நடந்தால் சூர்ப்பணகைக்கு ஏற்பட்ட கதிதான் உனக்கும் ஏற்படும்" என்று சொல்லிச் சட்டைப் பையிலிருந்து எதையோ எடுத்தார் சிவப்பிரகாசம். கணப்பொழுதில் அவர் கையில் சாண் நீளமுள்ள கத்தி ஒன்று பளபளவென்று மின்னியது.

மரகதமும் செங்கம்மாவும் நெருப்பை மிதித்தவர்கள்போல் துடிப்புடன் நின்று கொண்டிருந்தனர். அந்தக் கத்தியையும் சிவப்பிரகாசத்தின் பயங்கரமான முகத்தையும் பார்த்ததும் பொன்னியின் உடலே நடுங்கியது.

"ஜாக்கிரதை! உன்னுடைய அதட்டலுக்கெல்லாம் நான் அசைய மாட்டேன். மரியாதையாகச் சமையலறைக்குப் போய்விடு!" என்று செங்கம்மாவை எச்சரித்தார் சிவப்பிரகாசம்.

ஆனால் செங்கம்மா, தான் இருந்த இடத்தை விட்டு நகரவில்லை.

சிவப்பிரகாசம் சட்டென்று திரும்பி அறை வாசற்படிக்குச் சமீபமாக நிற்கும் பொன்னியைப் பார்த்து, "வேதா எங்கே இருக்கிறாள்! அவளை இங்கே அழைத்துக் கொண்டு வா" என்று அதிகார தொனியில் உத்தரவிட்டார்.

"என்னால் முடியாது!" என்றாள் பொன்னி தயக்கமோ பயமோ இல்லாமல். இத்தகைய பதிலைச் சிவப்பிரகாசம் பொன்னியிடமிருந்து எதிர்பார்க்கவில்லை. "என்ன...!" என்று ஆச்சர்யத்தோடு அவளைப் பார்த்தார்.

"என்னால் முடியாது என்று சொல்கிறேன்..." என்றாள் பொன்னி துருத்த வெறுப்போடு.

"அட கடவுளே! இங்கே நீங்கள் என்ன நடத்திக் கொண்டிருக்கிறீர்கள்! என்னுடைய பெண்ணை நான் பார்க்கக் கூடாதா! நீங்கள் மூவரும் சேர்ந்து இங்கே ஏதோ பயங்கரமான காரியங்களெல்லாம் செய்து கொண்டிருக்கிறீர்களென்று அல்லவா தோன்றுகிறது!" என்றார் சிவப்பிரகாசம்.

"இங்கே ஒரு பயங்கரமான காரியமும் நாங்கள் செய்து கொண்டிருக்கவில்லை. நீங்கள்தான் ஏதோ பயங்கரமெல்லாம் செய்ய இங்கே வந்தாற் போலிருக்கிறது! எங்கள் எஜமானியம்மாள் சொல்வதுதான் சரி. குழந்தைப் பருவத்திலேயே வேதாவை விட்டு விட்டு அவளுடைய தாயாரையும் கொன்று விட்டுப்போன உங்களுக்கு அவளைப் பார்க்க உரிமை இல்லைதான்!" என்றாள் பொன்னி.

"ஹூம்...அப்படியா! சரி, நானே என் பெண் இந்த வீட்டில் எங்கே இருக்கிறாள் என்று தேடிப் பார்த்துக் கொள்கிறேன். உங்களால் என்னைத் தடுக்க முடியாது. தடுத்தால் என்ன நேரும் என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே! ஜாக்கிரதை! இந்தப் பாழாய்ப் போன வீட்டின் ஒவ்வொரு மூலை முடுக்கையும் நான் சோதனை போடுகிறேன்" என்று சொல்லிவிட்டு அந்த அறையை விட்டு அதிவேகமாக வெளியே வந்தார் சிவப்பிரகாசம். அந்தச் சமயம் அவரைத் தடுக்கும் துணிவு ஒருவருக்கும் ஏற்படவில்லை.

வெளித் தாழ்வாரத்தில் விளக்கு ஒன்று மேஜை மீது வைக்கப்பட்டிருந்தது. எதிர்ப் புறத்தில் ஒரு அறை இருந்தது. அதன் கதவுகள் சாத்தப் பட்டிருந்தன. சிவப்பிரகாசம் ஆவேசத்தோடு அந்த அறைக் கதவைத் திறந்தார். தள்ளிய வேகத்தில் படாரென்று கதவு திறந்து கொண்டது. ஆனால் அந்த அறையில் இருள் சூழ்ந்திருந்ததே தவிர வேறொன்றுமில்லை.

பொன்னி மரகதத்தின் அறை வாசலிலேயே நின்றுகொண்டு அச்சத்தோடு சிவப்பிரகாசத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

"வேதா எங்கே இருக்கிறாள், சொல்லமாட்டாயா!" என்று கட்டு விடுவதுபோல் பொன்னியைப் பார்த்துக் கேட்டார் சிவப்பிரகாசம்.

"அதை நீங்களே பார்த்துக் கொள்ளுங்களேன்!" என்றாள் பொன்னி விறைப்பாக. (தொடரும்.)



"என்ன கம்பவுண்டர், ஸார்? உங்களுடைய பாக்கிக்காக நான் எத்தனை தடவை நடக்கிறது, சொல்லுங்க! இப்பவாவது தருகிறீர்களா, இல்லையா?"

"இந்த மாசம் நிச்சயமாகக் கொடுத்துவிடுகிறேன், போங்க!"

"அது சரி. கால் வலிக்கு ஏதாவது மருந்து இருந்தால் கொடுங்கள். வலியாவது போகட்டும்!"






டால்கம் பவுடர்



பள பள
வென்று ஜொலிக்கும்
புதுமைக்கு காஷ்மீர் புக்கே
டால்கம் பவுடரை உங்கள்
மேல் நாராளமாகத் தூவுங்கள்.
அது அதிகக் கசிவை உறிஞ்சுகிறது ... எரிச்சலையும்
அரிப்பையும் அடங்கச் செய்கிறது ... உங்களைக்
குளிர்மையுடனும் இனிய வாசனையுடனும், நாள்
முழுவதும் புதுமையுடனும் இருக்கச் செய்கிறது.

# காஷ்மீர் புக்கே

## மானிடர்கள் விரும்பும் பரிமளத்துடன்

1806 லிருந்து கோல்கேட் உயர்ந்த ரகத்திற்கும் பெயர்போனது.

# கன்னிப் பெண்



கிருஷ்ணா

பிரேமாவுக்கும் எனக்கும் ஒரே வயது. ஒரே வகுப்பில் கல்வி பயின்று வந்தோம். ஒரே சமயத்தில்தான் சாப்பிடுவோம்; ஒரே சமயத்தில்தான் விளையாடுவோம்; படிப்போம்! எல்லாம், ஒரே சமயத்தில்தான். எங்களுக்குள் அவ்வளவு ஒற்றுமை!

பிரேமா 'பச்சைப் பாவாடை உடுத்திக் கொண்ட அன்று நானும் பச்சைப் பாவாடை தான் உடுத்திக் கொள்வேன். அவள் இரட்டைப் பின்னல் பின்னிக்கொண்டால் நானும் இரட்டைப் பின்னல் பின்னிக் கொள்வேன். ஆனால்......நாங்கள் இவ்வளவு ஒற்றுமையாய் இருந்தும் ஒரே வீட்டில் குடியிருக்கவில்லை. ஏனென்றால் நாங்கள் இருவரும் ஒரே குடும்பத்தில் பிறக்கவில்லை.

பிரேமா என்னுடைய ஆப்தமான தோழி. அவள் தந்தை பரம்பரைப் பணக்காரர். அத்துடன் போஸ்டல் சூப்பிரண்டெண்ட் உத்தியோகம் வேறு. அவருக்கு நாலு பிள்ளைகளுக்கப்புறம், ஒரே பெண்ணாகப் பிறந்து கண்ணின் கருமணியென வளர்ந்து வந்தாள்.

என் அப்பாவும் ஏறக்குறைய, அதாவது மத்திய பணக்காரர் என்றுதான் சொல்ல வேண்டும். ஆறுவது பெண்ணாகிய என்னிடம் எவ்வளவு அன்புடன் இருக்க வேண்டுமோ, அந்த அளவில் என் பெற்றோர்கள் என்னிடம் பிரியமாகத்தான் இருந்தனர்.

பிரேமாவும் நானும் ஒரே வருஷத்தில் எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்தோம். எங்கள் இருவர் முன்னும் விவாக வலை விரித்து 'வரன்' பிடிக்க முயன்றனர் எங்கள் பெற்றோர்கள். இது இயல்புதானே?

பிரேமாவும் நானும் உள்ளத்தில் எத்தனை ஒற்றுமையாயிருந்தாலும்கூட உருவத்தில் எவ்வளவோ வேற்றுமையாகத் தானிருந்தோம். பிரேமா நல்ல நிறம்; நான் அதற்கு நேர் எதிரிடை. அவள் செம்பொன் விக்கிரகம்; நான் கரும்பொன் பொம்மை. துவளும் கொடியுடல், துள்ளும் மீன் விழி, கருங்கடலின் கருன் அலைகள் போன்ற கூந்தல் எல்லாம் அவளிடம் இருந்தன.

என்னிடமோ திடகாத்திரமான சரீரம் ஒன்று மட்டும் தான் இருந்தது. ஆகவே, வந்த வரன்களெல்லாம் என்னைத் தட்டிக் கழித்ததுமன்றி 'இந்தப் பெண்ணுக்கு வரன் வேறு தேடுகிறானே!' என்று என் அப்பாவைக் கேலி வேறு செய்தனர்.

பிரேமாவின் விஷயம் அப்படியல்ல. அவளுக்கென்றே பிறந்திருப்பவன் போல வந்து விட்டான் ஒரு வடிவழகன், அனந்தன் என்ற பெயருடன்.

பிரேமாவும் நானும் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபொழுது பிள்ளைகள் எங்களைக் கேலி செய்வார்கள், "ஜோடியைப் பாரு, ஜோடியை! காக்கையும் எலுமிச்சம் பழமும் போல!" என்று.

இன்று எலுமிச்சம் பழம் உரியவர் கையில் மங்களகரமாய்ப் போய்ச் சேரப்போகிறது.

ஆனால் இந்தக் காக்கையின் கதி?

பிரேமாவின் விவாகம் அமர்க்களமாக நடந்தேறியது.

சகல விதத்திலும் ஒற்றுமையாக இருந்த எங்கள் விவாகம் மட்டும் ஏன் ஒரே சமயத்தில் நடைபெறவில்லையோ, தெரியவில்லை?

'நீ ஏன் கறுப்பாகப் பிறந்தாய்?' என்றது என் மனம். உண்மைதான்! நான் கறுப்பாகப் பிறந்தது குற்றம்தான். ஆனால் நான் அனந்தனைப் போன்ற புருஷன் தான் வேண்டும் என்று விரும்பவில்லையே! என்னைப் போலக் கறுப்பாய் இருப்பவன் எனக்குக் கணவனாய் வந்து வாய்த்தால்கூடப் போதுமே! என்னை விடக் கறுப்பாக இருப்பவன் கூட அல்லவா என்னை வெறுத்தான்!

அதுதான் எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

★

எங்கள் வீட்டு மாடியில் உட்கார்ந்து கொண்டு வானத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தேன். சிமிட்டும் தாரகைகள் என்னை நோக்கிக் கேலி செய்தன.

மனமலரின் மொக்கு அவிழ்ந்து, அதில் சிந்தனை யெனும் வண்டு ரீங்காரம் செய்யும் பருவமல்லவா?

எண்ணற்ற சிந்தனை வண்டுகள் என் மன மலரை மொய்த்தன. அவற்றுக்கு என் கறுப்பு நிறம் பிடித்திருந்தது போலும்!

அனந்தனைப் போன்ற அழகன் எனக்குக் கிடைக்க மாட்டான் தான்! அதற்கு எவ்வளவோ தவமியற்றி யிருக்க வேண்டும். என்ன இருந்தாலும் என் தோழி பிரேமா பாக்கியசாலிதான்!

கார்காலக் கருமுகில்கள் வானத்தில் வளைவு வளைவாகத் தோன்றுமே, அதைப் போன்ற வளைவு வளைவான கிராப்பு. அறிவை விளக்கும் பரந்த நெற்றி. அழகை உறுதிப்படுத்தும் கீற்றுப் போன்ற அடர்த்தியுள்ள புருவம். இரு கண்களுக்கும் நடுவிலிருந்தே எடுப்பாக நிமிர்ந்து தோன்றும் நாசி. உறுதியான குணத்தைக் காட்டும் மெல்லிய உதடுகள். சற்றே நீண்ட முகம். அதில் சதா தவழும் புன்னகை. இதுதான் பிரேமாவின் கணவன் அனந்தனின் முகமண்டலம். சீ! இது என்ன நினைப்பு! அனந்தன் யார்? நான் யார்?

"சாந்தா! என்ன பிரமாதமான யோசனையில் ஆழ்ந்திருக்கிறாய்?" என்று கேட்டபடியே என்னருகில் வந்து நின்றாள் பிரேமா. அவளைக் கண்டதும் திடுக்கிட்ட நான் எப்படியோ சமாளித்துக் கொண்டேன்.

"சாந்து!...நான் ஊருக்குப் போகப் போகிறேன். என்னை அழைத்துக் கொண்டு போக அவர் வந்து விட்டார். நாளை இந்நேரம் நான் ரயிலில்......"

அவளுக்கும் அழுகை வந்துவிட்டது. எதற்காக? என்னை விட்டுப் பிரிவதற்கா?

"சீ! அசட்டுப் பெண்ணே! அழாதே! சந்தோஷமாகப் போய் வா! அடுத்த தடவை இங்கே வரும்பொழுது நீங்கள் மூன்று பேராக..." என்று ஆரம்பித்தேன்.

"போ, சாந்து! நீகூட இப்படி யெல்லாம் பேசினால்......" என்று முகத்தை ஆயிரம் கோணல் படுத்திக் கொண்டாள் பிரேமா. நாணத்தில் ஜனித்த அந்தக் கோணல்கள் கூட அவள் முகத்திற்கு ஒரு அலாதியான கவர்ச்சியை அளித்தன. ஆனந்தம் அவள் வதனத்தில் குமிழியிட்டுக் கொந்தளித்தது.

மாடியிலிருந்து கீழே இறங்கிய நான் பிரேமாவுக்கு வெற்றிலைச் சீவலுடன் என் அன்பளிப்பாக சிறிய தந்தப் பெட்டி ஒன்றையும் அளித்து வழியனுப்பினேன்.

★

பிரேமா புக்ககம் போய் ஆண்டுகள் மூன்று உருண்டோடி விட்டன. அன்று மாலை மூன்று மணிக்கு "மீனாட்சி! மீனாட்சி!" என்று அழைத்துக் கொண்டே என் தந்தை வெகு பரபரப்புடன் வீட்டினுள் நுழைந்தார்.

"என்ன காரியம் தட்டுக்கெட்டுத் தலை போகிறது? பெண்ணுக்குக் கல்யாணம் செய்து பாழாய்ப் போகிறதா? எதற்காக இப்படிக் கூச்சல் போடுகிறீர்கள்?" என்று அடுக்களையிலிருந்தபடியே அசுவாரசியமாகப் பதிலளித்தாள் என் தாயார்.

"நிஜமாகக் கல்யாணம்தானடி! நம் சாந்துவை ஒருவர் இன்னும் ஒரு மணி நேரத்திற்குள் பார்க்க வரப் போகிறார். உம்! சீக்கிரம் எல்லா ஏற்பாடுகளும் ஆகட்டும்! என்னமோ பெண் கறுப்பாய் இருந்தாலும் பரவாயில்லை என்கிறார். அதிர்ஷ்டமும் தெய்வ சங்கல்பமும் சேர்ந்து விட்டால்.........உம்! பிராப்தம் எப்படியோ?" என்று கூறி ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார் அப்பா.



டாக்டர் (கவலையுடன்):—உங்கள் உடம்பு சென்ற வாரத்தைவிட மோசமாகி விட்டதே! நான் சொன்னேனே, அதன்படி நடந்தீர்களா?

நோயாளி:—ஆகா!

டாக்டர்:—பத்து சிகரெட்டுக்கு மேல் உபயோகப்படுத்தக் கூடாது என்று சொன்னேனே! அதன்படி நடந்தீர்களா?

நோயாளி:—ஆமாம், டாக்டர்! நீங்கள் சொன்னபடியே தினம் பத்து சிகரெட் பிடித்து வருகிறேன். முன்னால் எனக்குச் சிகரெட் பழக்கமே கிடையாது, ஸார்!



டிக்கட்டு கொடுப்பவர் :— ஏய், யாரப்பா அது? ஏன் இந்தமாதிரி மேலே ஏறி டிக்கட்டு வாங்குகிறாய்? உடம்பில் திமிர் ஏறியிருக்கிறதா?

டிக்கட்டு வாங்குபவன் :—ஓ! ஞாபகம் இல்லீங்க. சினிமாவிலே டிக்கட்டு வாங்கி வாங்கிப் பழக்கமாகப் போச்சுங்க.

அம்மா பரபரப்புடன் காரியங்களைக் கவனிக்கலானாள். என்னைப் பார்க்க வரும் மாப்பிள்ளைகளுக்கு டிபன் செய்து செய்து தாய் அவளுடைய கரங்களுக்கு நல்ல பழக்கம் ஏற்பட்டிருக்கிறதே!

நான் கூட அலங்கரித்துக் கொள்ள வேண்டுமா? எதற்காக அலங்கரித்துக் கொள்ள வேண்டும்? அலங்காரமே வேண்டியதில்லை. என்னிடம் உள்ள லக்ஷணமோ அவலக்ஷணமோ என்னை விட்டு எங்கும் ஓடிவிடப் போவதில்லை. பின் எதற்கு வீண் பிரயாசை? —இப்படிப் பல சிந்தனைகள் என் மனத்தெழுந்தன.

ஆகவே, சலவை செய்யப்பட்ட ஓர் சாதாரணப் புடவையையும் பொறுக்கி யெடுத்த சில ஆபரணங்களையும் மட்டும் அணிந்து கொண்டு நான் வந்தவர் முன் ஆஜரானேன்.

அவர் என்னை நன்றாகப் பார்க்கிறார் என்பதை என் சரீரத்தின் துடிப்பு அறிவித்தது. மெல்லக் குனிந்த தலையை நிமிர்த்தி நானும் அவரைப் பார்த்தேன்.

ஆ! இதென்ன? இவர் வாலிபரா? இல்லை! இல்லை! வாலிபர் இருக்க வேண்டிய ஸ்தானத்தில் ஒரு வயோதிகர் இருந்தார். வயது ஐம்பது கண்டிப்பாய் இருக்கும். என்னைப் பார்க்க வந்த மாப்பிள்ளைகளிலும் இவர் ஐம்பதாவது ஆசாமியாக இருக்கலாம்.

தம் வயதை மறைப்பதற்காக அவர் அலங்காரக் கலையில் மூழ்கிக் குளித்துவிட்டு வந்திருக்கிறார் என்பது நன்கு தெரிந்தது.

தம் சம்மதத்தை அப்பாவிடம் தெரிவித்து விட்டு வெளியேறினார் அந்தக் கிழட்டு மாப்பிள்ளை.

என்னுள்ளத்தில் பொங்கிய உணர்ச்சிகளை எப்படி வர்ணிப்பது? உணர்ச்சிப் போராட்டத்துக்கிடையே, அனந்தனின் இன்ப முகம் ஏனோ என் மனக் கண்முன் ஒரு முறை பளிச்சிட்டு மறைந்தது. ஆகவே, என்ன ஆனாலும் சரி! இந்தக் கிழத்தை நான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை. இதுவரையிலும் வந்த வரன்களெல்லாம் என்னைத் தட்டிக் கழித்தனர். இப்பொழுது நான் மாப்பிள்ளையைத் தட்டிக் கழிக்கிறேன் என்று உறுதி செய்து கொண்டேன்.

எனக்கு எங்கிருந்து அவ்வளவு துணிச்சல் வந்ததோ, தெரியவில்லை!

பேப்பரையும் பேனாவையும் எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தேன்.

அன்பார்ந்த ஐயா!

என்னைத் தங்களுக்குப் பிடித்து விட்டதென்று அப்பாவிடம் சொன்னீர்களாம். நான் கறுப்புத்தான். ஆனால் என் உடல் மட்டுந்தான் கறுப்பே யொழிய உள்ளம் வெண்மையானது என்பதைத் தாங்கள் ஏன் புரிந்து கொள்ளவில்லை? அந்த வெண்மையான உள்ளத்தில் தங்கள் கிழட்டு உருவை நான் எப்படிப் பதித்துக் கொள்வேன்? நான் இவ்விதம் வெளிப்படையாக எழுதுவதற்காக வருந்தாதீர்கள்! எனக்கு உங்களை......ஏன்? ஒருவரையுமே கல்யாணம் செய்து கொள்ள இஷ்டமில்லை. தயவு செய்து மன்னிக்கவும். என் அப்பாவிற்குப் பெண் பிடிக்கவில்லை என்று ஒரு வரி எழுதிப் போட்டு விடுங்கள். என் வாழ்வை வீணாகப் பாழ் படுத்தாதீர்கள்! நான் எப்படியாவது பிழைத்துக் கொள்கிறேன்.

இப்படிக்கு,
சாந்தா

இவ்வாறு எழுதி உடனேயே தபாலிலும் சேர்த்து விட்டேன். நான் செய்த காரியம் சரியா தப்பா என்று கூடச் சிந்திக்கவில்லை.

*

ஒரு வாரம் சென்றது. அப்பா மட்டும் 'கடிதம் வரவில்லையே, கடிதம் வரவில்லையே!' என்று வாசலுக்கும் உள்ளுக்குமாக நடையாய் நடந்து கொண்டிருந்தார்.

"ஸ்ரீமதி சாந்தா!" என்று கூவிக் கொண்டே ஒரு கவரை விட்டெறிந்துவிட்டுச் சென்றான் தபால்காரன்.

பிரேமாவின் கடிதமா யிருக்கலாம் என்று எண்ணி ஆவலுடன் ஓடிப்போய் அதைக் கையில் எடுத்தேன். மேல் விலாசம் முற்றிலும் புதிய கையெழுத்தாக இருந்தது.

என் அறைக்குள் சென்று கதவைத் தாளிட்டுக் கொண்டு கடிதத்தைப் படிக்கலானேன்.

சாந்தாவுக்கு,

உன் கடிதம் கிடைத்தது. மிகவும் சந்தோஷம். ஓர் பெரிய பாதகம் செய்ய இருந்த என்னைத் தருந்த சமயத்தில் காப்பாற்றினாய். உன்னைப்போன்ற பேதைகள் படைத்த நான் உன்னை மனைவியாக்கிக் கொள்ள முன் வந்தது மாபெரும் பாதகம். அதற்குப் பிராயச்சித்தமாகத் தருந்த ஏற்பாட்டுடன் ஒரு வாரத்திற்குள் வருகிறேன். —கோபால சர்மா.

இதென்ன! ஒன்று வெட்டப் பூதம் புறப்படுகிறதே! ஒன்றும் புரியவில்லையே! 'தருந்த ஏற்பாடு' என்றால் அதன் அர்த்தம் என்ன?

குழம்பித் தவித்தது என் உள்ளம். மறுபடியும் அவர் வருகிறாராமே! அவர் முகத்தில் இனிமேல் நாம் எப்படி விழிப்பது?

★

**வா**சலில் ஒரு புது மாடல் கார் வந்து நின்றது. அதனுள்ளிருந்து இருவர் இறங்கினர்.

ஒருவர் அவர்தான். ஆடை அலங்காரத்தைப் பார்த்தாலே புரியாதா?

மற்றவர்?...அனந்தன் அல்லவா? அனந்தன் ஏன் இவருடன் வருகிறார்?

நான் யோசனையில் ஆழ்ந்தேன். "குழந்தாய்! இப்படி வா, அம்மா!" என்று என் தந்தை அன்பொழுக என்னை அழைத்தார். நான் நடைப்பிணம் போலச் சென்று இருவரையும் நமஸ்கரித்து எழுந்தேன்.

"அப்படியே உட்காரு, அம்மா! கூச்சப்படாதே!" என்று என்னை நோக்கித் தழுதழுத்த குரலில் கூறினார் கோபால சர்மா.

"இவன் யார் தெரியுமோ! இவன்தான் என் தங்கை பிள்ளை. அனந்தநாராயணன் என்று பெயர். நல்ல வருமானம், பையனை நன்றாய் நிமிர்ந்து பார்த்து உனக்குப் பிடிக்கிறதா என்று சொல், அம்மா! மூத்த தாரம் தவறிப் போய் ஒரு வருஷம்......" என்றார்.

ஆ! என்ன! பிரேமா இறந்து விட்டாளா? அதற்கு மேல் அவர் சொன்னவைகள் என் காதில் கிணற்றுக்குள் இருந்து ஒலிப்பது போலக் கேட்டன. தலை கிறுகிறுத்தது. உடல் படபடத்தது. இருந்தும் நினைவை இழக்காமல் ஒருவாறு சமாளித்துக் கொண்டேன்.

"நீ இவனையே கல்யாணம் பண்ணிக் கொள், அம்மா! இவனுடைய மூத்த சம்சாரம் நல்ல அழகாக சிகப்பாகத்தான் இருந்தாள். ஆனால் பயன்? நான் நினைத்த குற்றத்திற்குப் பிராயச்சித்தமாக அனந்தனையே உனக்குக் கல்யாணம் செய்து வைக்கத் தீர்மானித்து விட்டேன். அவனுக்குப் பூரண சம்மதம். உன் சம்மதந்தான் பாக்கி!" என்று கூறிக்கொண்டே போனார் கிழவர்.

என் மனம் துள்ளி யெழுந்தது. அனந்தன் இனி என் புருஷன்! ஆம்! நான் 'உம்' என்று சொல்லவேண்டியதுதான். உடனேயே அனந்தன் என் புருஷனாகி விடுவான்! ஆனால் அந்த எண்ணம் கண நேரத்திற்குத் தான்! அடுத்த கணமே, என் மனக் கண் முன்பு, பிரேமா கண்ணீர் வடிய வந்து நின்றாள். அவளுடைய அந்தப் பழைய கடிதம்!......

ஊருக்குப் போய் ஆறுவது மாதத்தில் வந்த அவளுடைய அந்த ஒரே கடிதம்......!

"சாந்து!......

பள பளவென்று ஜ்வலிப்பதெல்லாம் வைரமல்ல. மின்னுவதெல்லாம் பொன்னல்ல. வைரம் விஷத்துக்குச் சமானம். பொன், கூர்மையான கத்தியாக மாறினால் கழுத்தை அறுக்காமல் விடுமா! அதேபோலத்தான் அனந்தன்.

வாழ்வைப் பூஞ்சோலை என்று எண்ணினேன். ஆனால் அங்கே எனக்குப் பூநாகம்தான் காத்துக் கிடந்தது. நான் உனக்குக் கடிதம் எழுதுவது தெரிந்தால்கூட என்னைக் கொலைசெய்து விடுவார் அனந்த். மொத்தத்தில் நான் ஒரு கைதி. சாந்து! நீ பாக்கியசாலி! விவாக பந்தத்திற்குட்படாதவள். சுதந்திர மனுஷி. கண்ணெதிரில் மன்மதனைப் போன்ற புருஷனை வைத்துக்கொண்டிருந்தும், அவனை அடையக் கொடுத்து வைக்காத அபாக்கியவதி நான். தயவு செய்து எனக்கு நீ மேலும் கடிதம் எழுதி என்னைத் துன்புறுத்தாதே! இதுவே என் முதல் கடிதம்; என் கடைசிக் கடிதமும் கூட......"

பிரேமா என்னுள்ளத்தில் அலறினாள்.

"சாந்து! நீ கல்யாணம் செய்து கொள்ளாதே! அதிலும் இந்த அனந்தனை கல்யாணம் செய்து கொள்ளாதே! அதற்கு இந்தக் கிழவனே மேல்! சாந்து, புத்தி யிருந்தால் பிழைத்துக் கொள்! உன் வாழ்வை நீயே பாழ்படுத்திக் கொள்ளாதே!"

பிரேமாவின் உருவம் மறைந்தது.

கண்ணீரைத் துடைத்துக்கொண்டு கம்பீரமாக எழுந்து நின்றேன்.

"அப்பா! எனக்கு வயதோ இருபத்தைந்துக்கு மேலாகி விட்டது. இதுவரையிலும் விவாக மாகாமலிருந்த எனக்கு இனியும் அவ்விதமே வாழ்க்கை நடத்துவதில் ஒரு விதமான கஷ்டமும் ஏற்படாது. இவர்களில் ஒருவரையும் நான் கல்யாணம் செய்துகொள்ளப் போவதில்லை. கன்னிப் பெண்ணாகவே என் காலம் முடியட்டும்!" என்று நான் தீர்மானமான குரலில் சொன்னேன்.

என் உடல் வெட வெடுத்தது. என் அறைக்குள் நுழைந்து கதவைப் படீரென்று தாளிட்டு விட்டுப் பிரேமாவின் படத்தின் முன்பு உட்கார்ந்து கொண்டு குலுங்கக் குலுங்க அழுதேன்.

வெளியே கார் புறப்பட்டு விட்டதற்கு அறிகுறியாக 'ஹாரன்' சத்தம் கேட்டது.



"நம்ம பையனுக்குப் பட்டணத்திலே தந்தி ஆபீஸிலே வேலையாகியிருக்கிறது!"

"ரொம்ப நல்லதாய்ப் போச்சு! ஆபத்து என்று தந்தி கொடுத்தால் 'டக்' என்று அவனுக்குக் கிடைத்துவிடும் பாருங்கள்!"




"ரகுவுக்குப் போயும் போயும், இப்படி ஒரு மலடியைக் கொண்டு வந்து கட்டினேனே! அதற்கு என்னதான் சொல்ல வேண்டும்!" என்று அங்கலாய்த்துக் கொண்டாள் ருக்மணி அம்மாள்.

சமையலறையில் கைக்காரியமாக இருந்த மாலாவின் செவிகளில் விழுந்தன அந்த வார்த்தைகள். துக்கம் நெஞ்சை அடைத்தது. கண்களில் ததும்பி வழிந்த நீரைத் துடைத்துக் கொண்டாள்.

கூடத்தில் மறுபடியும் பேச்சுத் தொடங்க ஆரம்பித்தது.

"யாரைச் சொல்லி என்ன பயன், ருக்மணி! வயதுப் பெண்கள் காலா காலத்திலே குஞ்சும் குழந்தையுமாக இருந்து பார்த்திருக்கிறேன். உன் பிள்ளை கொடுத்து வைத்தது அவ்வளவுதான்! ஏன், உன் மருமகளை நல்ல டாக்டரிடம் காட்டக் கூடாதோ!" — இது கோடி வீட்டு அலமேலு அம்மாளின் யோசனை.

"ஆமாம், டாக்டர் மட்டும் என்னத்தைப் புதிதாகக் கண்டு பிடித்துச் சொல்லி விடுவார். என்னவோ, நான் செய்த பாவம்! காலாகாலத்திலே பேரன், பேத்திகளைப் பார்த்துக் கொஞ்சிக் குலாவக் கொடுத்து வைக்கவில்லை. கல்யாணம் ஆகி வருஷம் எட்டு ஆச்சு! இப்படியே மலடியாகவே இருந்து விடுவாளோ என்னவோ!"

"ஆமாம், ருக்மணி, யார் கண்டா! பிறந்தகத்து வம்சவாகு அப்படி யிருந்தால் அதற்கு யார் என்ன செய்ய முடியும்!"

"வம்சவாகு அப்படி என்று சொல்வதற்கில்லையடி! இவள் கூடப் பிறந்த தங்கைகள் இரண்டு பேரும் புக்ககம் போய், குழந்தைகளைப் பெற்றுக் கொண்டு இல்லையோ!" என்று பெருமூச்சு விட்டாள் ருக்மணி அம்மாள்.

"தெய்வக் குற்றமோ, என்னவோ! தெய்வ சாந்தி ஏதாவது செய்யச் சொல்லுறதுதானே..."

"அந்தக் குறையும் வைக்கவில்லை. அவனும், அவளும் போகாத கோயில், குளம் கிடையாது. ஒன்றும் பாக்கியில்லை. எனக்கென்னவோ ரகுவுக்கு இன்னொரு கல்யாணத்தைச் செய்து வைத்து விட வேணும் என்று ஆசை. அந்தப் பெண்ணாலாவது அவன் பிள்ளைக் கலி தீராதா! அவன் சம்மதிக்க வேண்டும்" என்று சொல்லும்போது ருக்மணி அம்மாளின் குரல் கம்மியது.

"சம்மதிக்காமல் என்ன! அவனுக்குத்தான் வயதாகி விட்டதா என்ன! அவனுக்கு மட்டும் ஆசை இல்லாமலா இருக்கும்! நீதான் சொல்லி அவனை வழிக்குக் கொண்டு வரணும்" என்று விடைபெற்றுக் கொண்டாள் அலமேலு அம்மாள்.

இந்தச் சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த மாலாவுக்கு இருதயமே வெடித்து விடும் போலிருந்தது. தான் ஒருத்தி இருக்கையில் மறுமணமா! விம்மி விம்மி அழுதாள்.

• • •

ரகுநாதன் ருக்மணி அம்மாளின் ஒரே பிள்ளை. சிறு வயதில் தந்தையை இழந்தவன். சுமாரான சொத்தும், சொந்த வீடு ஒன்றும் இருந்தன. தவிர கிராமத்தில் கொஞ்சம் நிலபுலன் உண்டு. இவைகளை வைத்துக் கொண்டு வருத்தம் தெரியாதவாறு பி. ஏ. வரை படிக்க வைத்து மூன்னுக்குக் கொண்டு வந்தவள் அவன் தாயார்தான். உள்ளூரிலேயே உத்தியோகமும் கிடைத்தது.

அவனுக்குப் பெண் தருகிறேன் என்று பலர் முன் வந்தனர். சில பணக்காரப் 'புள்ளி'களும் அவனை அணுகினர். ஆனால் அவன் பணத்துக்கு ஆசைப்படுபவன் அல்ல. லட்சியவாதி; பிடிவாதக்காரன். ஏதோ சாக்குப் போக்குக் கூறி ஒவ்வொன்றாகத் தட்டிக் கழித்து வந்தான்.

அவ்வளவு பிடிவாதமாக இருந்த ரகுவின் மனது மாலதியைப் போய்ப் பார்த்து வந்ததிலிருந்து மாறிவிட்டதைக் கண்டு அவன் தாயாருக்கே ஆச்சரியமாக இருந்தது.

பூவனூர் பள்ளிக்கூடத்தில் சாம்பசிவம் ஓர் உபாத்தியாயர். அவரது மூத்த பெண்தான் "மாலா" என்னும் மாலதி. அவளுக்குப் பின் ஒருவர் பின் ஒருவராகப் புக்ககம் செல்லத் தயாராகக் காத்துக் கொண்டிருந்தனர் இரு தங்கைகள்.

எத்தனையோ கஷ்டப்பட்டுச் சேர்த்த ரூபாய் இரண்டாயிரத்தையும் மாலாவின் திருமணத்துக்குச் செலவிடத் தயாராகவிருந்தார் அவள் தந்தை. ஆனால் பார்த்துவிட்டுச் சென்ற பையன்களின் பெற்றோர்கள் ஐயாயிரத்துக்குக் குறையாமல் எதிர்பார்த்தனர். ஒவ்வொரு இடமாக நழுவியது.

கடைசியில் ரகுநாதனைப் பற்றிக் கேள்விப் பட்டுத் திருச்சிவந்து சேர்ந்தார். அவருக்கு மூன்று பெண்கள் உள்ளவர் என்பதையும், ஏழை என்பதையும் கேள்விப்பட்டு அவனது மனம் இளகி விட்டது. பெண்ணைப் பார்த்து வரப் பூவனூருக்குச் சென்றான். பெண்ணைப் பார்த்தவுடனேயே பிடித்து விட்டது. மாநிற மேனி யென்றாலும், அவள் முகத்தில் குடிகொண்டிருந்த அலாதியான களையும், பருவ எழிலும், அவனை வசீகரித்து விட்டன. ஒரு நல்ல நாளில் மாலதியும் ரகுநாதனும் தம்பதிகளாயினர்.

ஏழைக் குடும்பத்திலுதித்து, வறுமையின் கொடுமைக்கு உள்ளானவள் என்பதனால் அவளிடம் மிகுந்த அன்பும், ஆதரவும் காட்டினான் அவன். மனம் போல தனக்குக் கணவன் வாய்த்ததால், மாலதியும் எல்லையற்ற மகிழ்ச்சி அடைந்தாள். முதன் முதலில் மாமியார் என்ற 'ஹோதா'வில் ருக்மணி அம்மாள் சற்றுப் 'பிகு'வாகவே தான் அவளிடம் நடந்துகொண்டாள். எனினும் மாலாவின் அடக்க ஒடுக்கமான நடத்தையும், பரிவான பேச்சும், அன்பான தொண்டும் கடுமையான மாமியாரைக்கூட வசீகரித்து விட்டன.

வருடங்கள் பறந்தோடின. ரகுவும் மாலதியும் கைப்பிடித்து ஆண்டுகள் எட்டு ஆயின.

தன் அன்புக் காணிக்கையாகச் சிறு குழந்தை ஒன்றுக்குக் கூடத் தாயாகவில்லையே அவள்!

'களீர்' என்ற சிரிப்பொலியாலும், மழலை மொழிகளாலும் வீட்டில் குடிகொண்டிருந்த அமைதியைக் குலைக்க ஒரு குழந்தையில்லையே!

ரகுநாதனுக்கு இயற்கையிலேயே, கள்ளங் கபடம் அறியாத சின்னஞ்சிறு குழந்தைகளிடம் அலாதியான ஆசை. தன்னையறியாத உற்சாகத்துடன் அவர்களுடன் விளையாட ஆரம்பித்து விடுவான்; கொஞ்சிக் குலாவுவான்.

தன் பிள்ளைக் கலி தீர்க்கத் தனக்கு ஒரு மகவு இல்லையே என்று மாலாவும் வருந்தினாள்.

அண்டை அயல் வீட்டுப் பெண்களுடன் நெருங்கிப் பழகுவதற்குக் கூட அவளுக்குக் கூச்சமாக இருந்தது. இரண்டு மூன்று பேர் பேசிக் கொண்டு இருந்தால், ஒரு வேளை தன்னை ஒரு 'மலடி' என்று சுட்டிக் காட்டித்தான் பேசுகிறார்களோ என்று தோன்றும் அவளுக்கு.

சிறு குழந்தைகளைக் கண்டால் பூர்த்தியடையாத தாய்மை உணர்ச்சியும் அன்பும் அவளது இருதய பீடத்திலிருந்து பீறிட்டுக் கொண்டு வரும். உணர்ச்சி ஆவேசத்தில் மிகுந்த பரிவுடன் வாரியெடுத்து, மார்புடன் அணைத்து முத்தங்களைச் சொரிவாள்; கொஞ்சுவாள். அதன் முல்லைச் சிரிப்பில் தன் சோகத்தை மறந்திடுவாள். சொல்லும் மழலையிலே துக்கம் தவிர்த்திடுவாள்.

பெருக்கெடுத்தோடும், வஞ்சனையற்ற அந்த அன்பிற்குக் கூடக் களங்கம் கூறத் தயங்கவில்லை சமூகம். அந்தச் சம்பவம் அவளது மிருதுவான உள்ளத்தைச் சுக்கல் சுக்கலாக நொறுக்கிவிட்டது.

எதிர்வீட்டு ராதையின் குழந்தை மூன்று வயதுச் சிறுவன். கண்ணன் என்னும் அவன் பெயருக்கேற்ப முகத்தில் குறுகுறு வென்ற ஒரு அசாதாரண களை; சுருள் சுருளான கேசம் அவனது வதனத்துக்கு ஒரு தனி வசீகரமாயிருக்கும். மாலதியின் வீடே கதி என்று இருப்பான். பிள்ளையில்லாக் குறையைச் சற்று மறந்திருப்பாள், அவனைக் கொஞ்சுகையில்.

மாலதியும், ராதையும் உடன் பிறந்தவர்கள் போல் வெகு அன்னியோன்னியமாகப் பழகி வந்தனர். மாலாவின் மனத்துயரம் அவளுக்குத் தெரியாதா, என்ன? குழந்தை கண்ணனை மாலாவிடம் ஒப்படைத்து விட்டு ராதை எங்கு வேணுமானாலும் சென்று விடுவாள்.



ஒருநாள் கண்ணனுக்கு உடம்பு லேசாகச் சுட்டது. ஜுரம் அதிகமாயிற்று. கண்களைத் திறக்கக்கூட முடியாமல் படுத்திருந்தது குழந்தை. துடியாய்த் துடித்துவிட்டாள் மாலதி. கண்ணன் மீது அவளுக்கு அவ்வளவு வாஞ்சை! ஜுர வேகத்திலும் கூட "மாலதி மாமி!... மாலதி மாமி!" என்று குழந்தை கண்ணன் அழைக்கும்போது "இதோ இருக்கேண்டா, கண்ணு!" என்று சாந்தப்படுத்துவாள். வீட்டுக் காரியத்தைக் கூடப் போட்டுவிட்டுக் குழந்தையைக் கவனிப்பதற்கு ஓடி விடுவாள் எதிர் வீட்டுக்கு.

அன்று ஜுரம் சற்றுத் தணிந்திருந்தது. சமையல் வேலையை ஒரு வழியாக முடித்து விட்டுக் கண்ணனைக் காண்பதற்கு எதிர் வீட்டினுள் நுழைந்தவள், உள்ளே தன்னைப்பற்றிப் பேசுவதைக் கேட்டுத் தயங்கினின்றாள்.

ராதையின் மாமியார் கூறிக் கொண்டிருந்தாள்: "...விவரம் அறியாத சின்னஞ் சிறு குழந்தையை அந்தக் கழிசடை வீடே கதி என்று விட்டு வைத்திருந்ததால்தான் இப்படிக் கண் திறக்காமல் படுத்துவிட்டது. குழந்தை அருமை அவளுக்குத் தெரியுமா! மணி மணியாகப் பெற்று, அந்த மலடி கையால் வளர்க்க விடணுமா! மலடி வயிறு எரிந்தால், பச்சை மரம்கூடப் பற்றி எரியும் என்று சொல்வார்களே. குழந்தை பிழைத்து எழுந்திருக்கட்டும்; அந்த மலடி வீட்டு வாசற்படி கூட மிதிக்க விடாதே!" என்று ராதையை எச்சரித்துக் கொண்டிருந்தாள்.

இதைக் கேட்டவுடன் மாலாவின் நெஞ்சம் 'பகீர்' என்றது! வாசற்படியிலேயே கற்சிலை போல் நின்று விட்டாள்.

ஒரு கணம் நிதானித்து, குழந்தை கண்ணனைப் பார்க்காமலேயே வீடு திரும்பினாள்.

அதற்குப் பிறகு குழந்தை கண்ணனை எதிர் வீட்டார் மாலாவின் கண்ணிலே கூடக் காட்டவில்லை. இதுகாறும் நெருங்கிப் பழகி வந்த ராதை கூட, அவசியமானாலொழிய, மாலாவிடம் பேசுவதை நிறுத்திக் கொண்டு விட்டாள்.

* * *

அண்டை அயலார்தான் புண்படப் பேசுகிறார்கள் என்றால், அனுபவத்திலும், வயதிலும் முதிர்ந்த தன் மாமியார்கூடக் குத்தலாகப் பேசுவது அவள் உள்ளத்தை வருத்தியது.

மாலதிக்கு ரோஜாப்பூ என்றால் மிகுந்த ஆசை. வீட்டுத் தோட்டத்தில் நடுவதற்காக ஐந்தாறு இளங் கன்றுகள் வாங்கிக் கொண்டு வந்திருந்தான் ரகுநாதன். அவைகளை நடுவதன் பொருட்டுக் கொத்திப் பண்படுத்திக் கொண்டிருந்தாள் மாலதி. மாமியார் இதைப் பார்த்து விட்டாள்.

"அடியே மாலா! தோட்டம் 'வெறிச்'சென்று இருக்கிறதே என்று மிகுந்த ஆசையோடு வாங்கிக் கொண்டு வந்திருக்கிறான். உன் கையாலா அவைகளை நடவேண்டும்! உன்னைப் போல் அவைகளும் 'மொட்டை'யாய் நின்றுவிடப் போகின்றன..." என்று வெடுக்கென்று கூறியது புண்பட்ட அவள் உள்ளத்தை மேலும் நோகச் செய்தது.

எல்லோருமே தன்னை ஒதுக்கி வைத்துப் பேசுவதையும், இளப்பமாக நடத்துவதையும் கண்டு மனம் புழுங்குவாள். சிற்சில சமயங்களில் சிறு குழந்தைபோல் 'ஹோ'வென்று அழ ஆரம்பித்து விடுவாள். ரகுநாதனுக்கு அதன் காரணம் என்ன வென்று தெரியாமலா இருக்கும்! அன்புடன் அவளை அணைத்து, "சீ அசடே! அழுதால் நடக்கிற காரியமா இது!" என்று கூறித் தேற்றுவான்.

அவள் மனம் நோகாத வண்ணம் நடந்து கொண்டவன் அவன் ஒருவன்தான். ஆபீசிலிருந்து திரும்புகையில் கதம்பமோ, ரோஜாப்பூவோ வாங்காமல் வீட்டுக்கு வரமாட்டான். விதம் விதமான பழங்களும், தின்பண்டங்களும் வாங்கி வருவான். அவனுக்கு மாலதி ஒரு குழந்தைபோல்

தானே! அவளைக் கூட்டிச் செல்லாமல் ஒரு சினிமாவுக்குக்கூடப் போக மாட்டான்.

"அவனுக்கு என்ன, பின்னையா குட்டியா! அலங்காரமாக டிரஸ் செய்து கொண்டு புதுத் தம்பதிகள்போலக் கிளம்பி விடுகிறார்கள். குழந்தை இல்லையே என்ற வருத்தம் இருக்கிறதா, பாரடி" என்று தன் காதுபடச் சிலர் பேசிக் கொள்வதை அவன் கவனிக்காமல் இல்லை. அதை மனத்தில் வைத்துக்கொண்டு, மறுமுறை தன் கணவன் அழைக்கும்போது வர மறுத்து விடுவாள். "ஊரில் நாலுபேர் அப்படித்தான் பொறுமைப் படுவார்கள். அவர்களுக்கு வீட்டில் குழந்தைகள் உபத்திரவம். ஜோடியாகச் சினிமாவுக்குப் போக முடியவில்லை என்ற வருத்தம். நமக்கு நாளைக்குக் குழந்தை பிறந்துவிட்டால் போக முடியுமா என்ன......!" என்று எப்படியாவது சமாதானப் படுத்தி அவளை அழைத்துச் சென்று விடுவான்.

* * *

ருக்மணி அம்மாளுக்குக் காலா காலத்தில் பேரன் பேத்திகளை எடுத்துக் கொஞ்ச முடியவில்லையே என்ற ஆதங்கம் வலுத்துக் கொண்டே வந்தது. ஆகவே ரகுநாதனுக்கு எப்படியாவது இன்னொரு கல்யாணம் செய்து வைத்துவிட வேண்டுமென்று தீர்மானித்து விட்டாள்.

இதுகாறும் அவனிடம் நேரிடையாகக் கேட்க வேண்டாம் என்று தயங்கி ஓடி மறைந்த அவளது மனச்சாட்சி, இப்போது தைரிய மடைந்தது.

அன்று இரவு சாப்பாடு முடிந்ததும் ரகுநாதன் மாடியில் ஏதோ படித்துக் கொண்டிருந்தான். மாலதி கீழே கைக் காரியமாக இருந்தாள். ருக்மணி அம்மாள் மெள்ள ஆரம்பித்தாள்:

"ஏண்டாப்பா! எவ்வளவு நாளைக்குத்தான் இப்படியே இருந்து விடலாம் என்று உத்தேசம்! குழந்தைகள் இல்லாமல் வீடே 'வெறிச்' சென்று இருக்கு. நான் சொல்வதைக் கேள். இனிமேல் மாலாவுக்குப் பிறக்குமென்பது நிச்சயமில்லை. மேலண்டை வீட்டு ராமசாமி மாமாவுக்கு ஒரு பெண் இருக்கிறது. கிளி போல் மூக்கும் முழியுமாக நன்றாக இருப்பாள். தாயில்லாப் பெண். சித்தி ஒருத்தியிடம் அகப்பட்டுக் கொண்டு கஷ்டப்படுகிறது. யோசிக்க வேண்டிய அவசியமே யில்லை. அவள் வருகிற முகூர்த்தமாவது வீட்டில் குஞ்சும், குழந்தையும் பிறக்கட்டுமே! நீ, 'சரி' என்று நீ சொல்ல வேண்டியதுதான்; நாளைக்கே ஒரு மஞ்சள் சரட்டை அதன் கழுத்தில் கட்டி வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்து விடலாம்......" என்று மூச்சு விடாமல் படபட வென்று சொல்லி நிறுத்தினாள்.

ரகுநாதன் ஒரு கணம் அசந்துவிட்டான். மாலதியின் ஸ்தானத்தை — அதுவும், அவள் இருக்கையிலேயே —வேறு ஒருத்தி கைப்பற்றுவது என்பதை அவனால் சிந்தித்துப் பார்க்கக்கூட முடியவில்லை.

"ஏன் அம்மா, மாலா சம்மதிக்க வேண்டாமா!" என்று அவனை அறியாமலேயே கேள்வி வெளிப் பட்டது. சட்டென்று உதட்டைக் கடித்துக் கொண்டான்.

"அவள் சம்மதம் எதற்கடா! அவள் அப்படி ஏதாவது தகராறு செய்தால் — 'ஜீவனாம்சம்' கொடுத்து விடுகிறேன்; 'மகராஜியாய் நீ உன் பிறந்தகத்திற்குப் போய் வா, அம்மா!' என்று சொல்லி அனுப்பி விட வேண்டியதுதான்......!"

'ஜீவனாம்சம்' என்ற சொல் தாயின் வாயிலிருந்து வெளிப்பட்டதுதான் தாமதம், புழு வாய்த் துடித்து விட்டான் ரகு. கடைசியில் மாலாவின் கதி இப்படியா ஆகவேண்டும்! "சரி, அம்மா யோசித்துப் பிறகு சொல்கிறேன்" என்று கூறிவிட்டு அப்பால் சென்று விட்டான்.

* * *

அன்று இரவு. வெகுநேரம் வரை தூக்கமின்றிப் புரண்டு புரண்டு படுத்தான். மனதில் பல வேறு எண்ணங்கள் கொந்தளித்தன.

'ஜில்'லென்ற மென்கரங்கள் தன்னைத் தீண்டுவதை யுணர்ந்து கண் விழித்தான். மாலதி மிகுந்த பரிவுடன் அவனருகில் அமர்ந்து தலையைக் கோதிக் கொண்டிருந்தாள். அவள் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான். பத்தரை மாற்றுப் பொன்னொத்த மேனியும், அமுதூற்றினை யொத்த இதழ்களும், மருண்ட அவள் விழிகளும் அவனுக்கு இன்ப லாகிரி ஊட்டின. உணர்ச்சிச் சுழிப்பில் பேச்சுக்கு இடமேது! அன்புடன் அணைத்துக் கொண்டான்.

மாலதி மெதுவான குரலில் சொன்னாள்: "உங்களை ஒன்று கேட்கலாமா!......கோபித்துக் கொள்ள மாட்டீர்களே!"—சிறு குழந்தையின் கொஞ்சல் போன்றிருந்தது அவள் குரல்.

முகத்தில் கேள்விக் குறி தோன்ற அவளை ஆவலோடு பார்த்தான்.

"நான்...எனக்கு...உடம்பு ஒரு வாரமாகச் சரியாக இல்லை. அம்மா, அப்பாவைப் பார்த்தும் நாளாச்சு. இங்கே என் மனசுக்கும் நிம்மதியில்லை. 'வெறி'ச்சென்று இருக்கு. ஊருக்குப் போய்விட்டு வரட்டுமா!" என்று கேட்டாள்.

திடீரென்று பிறந்தகம் போக வேண்டுமென்று அவள் கூறியவுடன், அவனுக்கு உண்மை விளங்கி





போலீஸ்காரன் :—ஏன் அப்பா, நடு நிசி ஆகப் போகிறதே, இன்னுமா நீ தூங்கவில்லை?

கைதி :—இந்த நேரத்தில் தூங்கி எனக்குப் பழக்கம் இல்லீங்களே !

விட்டது. "சரிதான், அம்மா கூறியவை இவள் காதுக்கும் எட்டிவிட்டன" என்று நினைத்தான்.

அதற்குள் மாலாவே ஆரம்பித்தாள் :

"எனக்கு விஷயம் எல்லாம் தெரியும்! நான் இங்கே இருந்தால், அம்மா கூறிய யோசனைக்கு நீங்கள் சம்மதிக்க மாட்டீர்கள். நம் நன்மைக்குத் தானே சொல்கிறார் அவர். ஆனால் அம்மா சொன்ன படி 'ஜீவனாம்சம்' மட்டும் கொடுத்து அனுப்பி விடாதீர்கள். கஞ்சியோ கூழோ எதைக் கொடுத் தாலும் குடித்து விட்டு உங்கள் வீட்டு வேலைக்காரி மாதிரி உங்கள் காலடியிலேயே கிடக்கிறேன். இந்த உதவியைச் செய்வீர்களா!"

ரகுநாதனுக்கு வாய் பேச முடியவில்லை. "போடி பைத்தியமே! என்னை அவ்வளவு கல் நெஞ்சன் என்று எண்ணிக் கொண்டாய்!" என்று தழு தழுத்த குரலில் கூறி, அவளை அன்போடு அணைத் துக் கொண்டான்.

வான வீதியில் பவனி வந்த தை மாதத்தி நிலவு மூங்கிலின் நெஞ்சில் நுழைந்தது. எங்கெல் லாம் மோன உவகை சமைந்தது.

* * *

மறு நாள் எவ்வளவு தடுத்தும் மாலா பிறந் தகம் கிளம்பியது ருக்மணி அம்மாளுக்கு விந்தை யாக இருந்தது. ரகு ஏதாவது கோபமாகப் பேசி யிருப்பானோ என்று நினைத்துக் கொண்டாள். 'எதற்கும் அவள் இருந்தால் சரிப்படாது. கொஞ்ச நாள் அவள் கண்ணில் படாமலிருந்தால் நல்லது தான்' என்று எண்ணிச் சமாதானம் அடைந்தாள்.

மாதங்கள் நான்கு கழிந்தன. மாலா சென்று விட்டபின், ரகுநாதனுக்கு ஒவ்வொரு விநாடியும் ஒவ்வொரு யுகங்களாக விரிந்து காணப்பட்டன. ஆபீஸிலிருந்து களைப்புடன் வீடு திரும்புகையில் மலர்ந்த முகத்துடன் வரவேற்று அன்புடன் உபசரிக்க மாலதி இல்லையே!

தவிர ஒவ்வொரு நாளும் தாயாரின் வற்புறுத் தல் அதிகரித்துக்கொண்டு வந்தது. ரகு வாய்மூடி மௌனியாக இருந்தான். அவன் மனம் வேதனைப் பட்டது. அம்மாவின் பிடிவாதத்தைக் கண்டு மனதிற்குள் கோபப்பட்டான். ஆனால் அவன் அதை வெளியே காட்டிக் கொள்ளவில்லை.

ரகுவின் மௌனத்தைத் தனக்குச் சாதகமாக உபயோகித்துக்கொண்டு இன்னொரு கல்யாணத் துக்கு ஏற்பாடு செய்தாள் அவன் தாயார். விவாகத் துக்கு நாள் குறிப்பது பற்றிப் பேச்சு வார்த் தைகள் நடந்து கொண்டிருந்தன.

அப்போதுதான் அந்தக் கடிதம் வந்தது. பூவ ளூரிலிருந்து அவன் மாமனார் எழுதியிருந்தார்.

மாப்பிள்ளை ரகுவுக்கு.

ஆசீர்வாதம். இவ்விடம் மாலதி, மற்ற யாவரும் சௌக்கியமாக இருக்கிறார்கள்.

முன் அறிவிப்பில்லாமல் திடீரென்று அவள் இவ்விடம் வந்தது எங்களுக்குத் திகைப்பாக இருந்தது. தம்பதிகளிடையே ஏதேனும் மனஸ் தாபமோ என்றுகூட நினைத்தேன். அதெல்லாம் ஒன்றுமில்லை என்று பிறகுதான் தெரிய வந்தது.

மாலதி இங்கு வந்தது. ஒரு விதத்தில் நல்ல தாயிற்று. இப்போது அவள் நான்கு மாதம் கர்ப்பிணியாக இருக்கிறாள்.

அவளுக்கு இங்கு இருப்பே கொள்ளவில்லை. அங்கு வரவேண்டுமென்று துடிக்கிறாள்.

ஆகவே, நானே மெயிலில் மாலதியை அழைத் துக் கொண்டு வருகிறேன். வளைகாப்பு, சீமந்தம் என்று இருக்கின்றனவே! உன் உடம்பைக் கவ னித்துக் கொள்ளவும்.

சாம்பசிவம்

கடிதத்தைத் திருப்பித் திருப்பிப் படித்தும் கூட அவனுக்கு அலுக்கவில்லை. உடலும் உள்ள மும் ஒருங்கே பரவசத்தால் பூரித்தன. தான் இன்னொரு கல்யாண சங்கடத்திலிருந்து மீண்டதை எண்ணிச் சந்தோஷப்பட்டான். "மாலா தாய் ஆகப் போகிறாள்; 'அப்பா' என்று மழலை மொழிந்து, தளிர்க் கரங்களால் தன் கழுத்தைக் கட்டிக் கொள்ள ஒரு குழந்தை பிறக்கப் போகிறது" என்ற எண்ணம் அவனை ஆனந்தத்தில் ஆழ்த்தியது மகிழ்ச்சி மிகுதியால் குதித்தான்.

கடிதத்தைப் பற்றிக் கேள்விப் பட்டவுடன், அவன் தாய் எல்லையற்ற ஆனந்தமடைந்தாள்.

"என்னடா, திடீரென்று பிறந்தகம் போகி றாளே என்று பார்த்தேன்! இப்பொழுதுதான் தெரிகிறது மர்மம்! ஏண்டா, இங்கேயே இருந் தால் மசக்கைப் பெண்ணுக்கு வேண்டியவைகளை நான் செய்ய மாட்டேனா!......ஹூம், ரொம்ப நாளைக்குப் பிறகு பிள்ளையாண்டிருக்கிறாள்! சௌக்யமாய் இருக்க வேண்டும்! மறக்காமல் ஸ்டேஷனுக்குப் போய் அழைத்து வா! நல்ல வேளை, இன்னொரு கல்யாணத்துக்கு நாள் குறிக்க வில்லை. அவர்களை வேறு இடம் பார்க்கச் சொல்லி விடுகிறேன்" என்று மூச்சு விடாமல் கூறினாள். தன் தாயாருடைய கண்களில் ஆனந்தக் கண்ணீர் துளித்ததை ரகுநாதன் கவனிக்காமலில்லை.

* * *

வயிறும் பிள்ளையுமாக வந்து சேர்ந்தாள் மாலா. யாவரும் குதூகலத்தில் ஆழ்ந்திருந்தனர்.

"எங்கே, 'ஜீவனாம்சம்' கொடுத்து அனுப்பி விடப் போகிறீர்களோ என்று பயந்துவிட்டேன்!" என்று கன்னங் குழிய விழக் கொஞ்சலாகக் கேட் டாள். அவள் கண்களில் குறும்பு குறுகுறுத்தது.

அவளை உச்சிமுதல் உள்ளங்கால்வரை ஊடுருவி நோக்கினான் ரகுநாதன். வயிறும் பிள்ளையுமாக இருந்ததால், ஒருபுறம் ஒருக்களித்தவாறு நின்று கொண்டிருந்தாள். வதனத்தில் ஒரு தனிக் கவர்ச்சி; அந்த வசீகரத்தில் ஒரு குழைவு: மெல்லிய கீற்று போன்ற இதழ்களிலே முறுவல் ஊறும்போது குழி விழும் ரோஜாக் கன்னங்கள். அவன் பரவசமடைந்தான்.

அவளை அன்புடன் தன்னருகில் அழைத்து அணைத்துக் கொண்டான் ரகுநாதன்.

அப்போது ஏனோ அவளது முகம் நாணத்தால் குங்குமம் போல் சிவந்தது! எல்லாமாகச் சேர்ந்து மாலா ஒரு பொற்பாவை போல விளங்கினாள்.

# ஆரோக்கிய ரகசியம்

வி. எஸ். குமாரசாமி

## 7. பாரிச வாய்வு

பாரிச வாய்வு சாதாரணமாகச் சற்று வயதானவர்களுக்குத்தான் வருவது வழக்கம். ஆனால் இக்காலம் சிறியவர்களுக்குங் கூட வருகிறது. இதில் பலவிதம் உண்டு. பொதுவாக உடலின் ஒரு பக்கம் சுவாதீனமில்லாமல் போய் விடுவதற்கே "பாரிச வாய்வு" என்று சொல்லுவார்கள். உடலில் ஒரு கை, ஒருகால் சுவாதீனமிழந்து விடும். தன்னிச்சையாய்க் கையைத் தூக்கவோ, காலை எடுக்கவோ வராது. அப்பேர்ப்பட்டவர்கள் படுக்கையில் கிடக்க வேண்டியதுதான். இந்த வியாதியானது இருந்தாற் போலிருந்து சிலரைத் தாக்குகிறது. சாதாரணமாய்ப் பேசிக் கொண்டிருப்பார்கள். திடீரென்று என்னமோ தலை அதிகமாய் வலிக்கிறது என்பார்கள். உடனே சற்று நேரத்தில் பிரக்ஞை தவறி விடும். அதற்கு உடனே சாந்தி பல செய்வார்கள். மருத்துவமும் பல நடைபெறும். கடைசியில் அதன் முடிவைப் பார்க்கும்போது ஒரு கை, ஒரு கால், தூக்கவோ அசைக்கவோ முடியாமற் போய் விட்டிருக்கும்.

சிலருக்கு முதலில் ஜுரம் வந்து, இரண்டு மூன்று, நாட்களில் கை கால் சுவாதீனமில்லாமல் போய் விடும். சிலருக்குச் சிறிது சிறிதாக ஒரு பக்கம் கை கால் முதலில் வலிக்கும். பிறகு படிப்படியாய்ச் சுவாதீனமில்லாமல் போய் விடும். இதில் சிலருக்கு வலது பக்கக் கை கால்கள் சுவாதீனமிழப்பதுண்டு. சிலருக்கு இடது புறத்திலும் சுவாதீனமில்லாமற் போய் விடும். சிலருக்கு இரண்டு கால்களும் இரண்டு கைகளுமே சுவாதீனமற்று விடும். சிலருக்குக் கை மட்டும் தூக்க வராது; கால் நன்றாயிருக்கும். சிலருக்குக் கைகள் நன்றாயிருக்கும்; கால் மட்டும் அசைக்க வராது. ஆகவே இது எப்படியும் பலவிதத்தில் தன் சொரூபத்தைக் காட்டுகிறது.

இதற்கும் பலவித வைத்திய முறைகள் கையாளப் படுகின்றன. ஆங்கில வைத்தியத்தில் இந்தப் பாரிச வாய்வு அவ்வளவு குணமாகிறது என்று சொல்வதற்கில்லை. அதை இப்பொழுது நன்கு தெரிந்த டாக்டர்கள் முன்பே சொல்லி விடுவார்கள். சாதாரணமாய் எந்த வைத்தியர்களும் அப்படிச் சொல்ல மாட்டார்கள்; சொல்லவும் முடியாது. அவர்களும் மனிதர்கள் தானே! முடிந்த மட்டும் முயற்சி செய்யலாம். குணமானால் ஆகட்டும். 'வருகிற வரை லாபம்தானே' என்று எண்ணுகிறவர்களும் உண்டு. ஆனால் நம்மவர்களுக்குத்தான் அந்த மோகம் போவதில்லை. அவர்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டும், பெரிய பெரிய சிபார்சுகளைக் கொண்டும் ஆஸ்பத்திரிகளில் இடந் தேடிக் கொள்வார்கள். அவர்களும் பல மாதங்கள் ஊசிகள், பல மருந்துகள் பல எக்ஸ்ரே சிகிச்சைகள் அளிப்பார்கள். கடைசியில் 'இவ் வியாதி குணமாகாது. வீட்டுக்குப் போகலாம்' என்று மிக்க பவ்யத்துடன் சொல்லி விடுவார்கள்.

'நீ வீட்டுக்குப் போகலாம்' என்று சொன்னால் அர்த்தமென்ன! பிரசித்தி பெற்ற ஆங்கில டாக்டர்களே அப்படிச் சொல்லி விட்ட பிறகு வேறு வழி! 'சரி, நீ இந்த உலகத்திலிருக்க லாயக்கில்லை; வேறு உலகத்தில்தான் இருக்க லாயக்கானவன்' என்று யமபுரிக்குச் சீட்டுக் கொடுத்து அனுப்புவது தவிர இதற்கு வேறு என்ன அர்த்தம் இருக்க முடியும்! சில வைத்தியர்கள் "நீ வீட்டிற்குச் சென்று இஷ்டமானதை யெல்லாம் சாப்பிடு!" என்று கூடச் சொல்லுவார்கள். வீட்டில் வாய் கட்டி பயத்துடன் இருந்தாலாவது இன்னும் சில நாட்கள் உயிருடன் இருக்கலாம், கை கால் சுவாதீனமில்லாமல் சதா பிறருக்குத் துன்பமாய் வாழ்பவன் இன்னும் அதிக நாட்களிருந்தால் மற்றவர்களுக்கு மிகுந்த துன்பம் என்றுதானோ என்னவோ வைத்தியர்கள் அப்படிச் சொல்லுகிறார்கள். அல்லது நீ வாயை அடக்காமல் இஷ்டமானதை யெல்லாம் கண்ட கண்ட நேரத்தில் சாப்பிட்டு இக்கதிக்கானாய். ஆகையால் அதே வழியைக் கடைப் பிடித்துச் சீக்கிரம் உன் கடையைக் கட்டு என்று சொல்லுவதாயிருக்கலாம்.

ஆகவே, வைத்தியர்கள், தீர்ப்பை எப்படிக் கூறினாலும், நோயாளி அப்படிச் சாவதற்குச் சித்தமாயிருக்க மாட்டான். கை கால் சுவாதீனமில்லாவிட்டாலும், தன்னைக் கவனிப்பார் இருந்தாலும், இல்லாவிட்டாலும், ஏழையானாலும், பணக்காரனானாலும் இன்னும் சில நாட்கள் இருக்க மாட்டோமா! வேறு வைத்தியம்தான் செய்து பார்ப்போமே. அதனாலாவது நம் ஆயுள் நீடித்து வாழ்க்கை இன்பம் சரியாய் அனுபவிக்க மாட்டோமா!" என்று ஆசை கொள்ளுவான். நன்றாய் நடமாடுகிறவர்களைப் பார்த்து "நாமும் இம்மாதிரி எப்பொழுது எழுந்து நடக்கப் போகிறோம்! அந்த நாள் எப்போது வரும்! உலகத்தில் எனக்கு வேறு ஒன்றுமே வேண்டாம். நன்றாய் நடமாடினால் போதும்" என்று நினைத்து நினைத்து ஏங்குவான். அவனுடைய மன வேதனை அவனுக்கல்லவா தெரியும்! கற்பனை உள்ள மற்றவர்கள் சிந்தித்துப் பார்க்கட்டும்!

மரணங்களில் பலவிதம்; வீர மரணம், தியாக மரணம், விபத்து மரணம், அகால மரணம், காதல் மரணம், திடீர் மரணம், தற்கொலையால் மரணம், கொலையால் மரணம், நோய் மரணம் எனப் பலவகை உண்டு. "ஆறிலும் சாவு, நூறிலும் சாவு." ஆனால் எப்பொழுது இறந்தாலுமென்ன என்று வேதாந்தம் பேசி வீரச் செயல்களைப் புரியா விட்டாலும் உண்பதில் வீரங்காட்டி ஊனைச் சிதைத்து ஊழ்வினை என்று நினைத்து ஊழியை அடைவோர் பலர். "நூற்றுக்குத் தொண்ணூறு பேர் இன்றைய உலகத்தில் சாப்பிடுவதனாலேயே சாகிறார்கள்!" என்று சொன்னால் மிகையாகாது. இவர்களெல்லாம் உண்பதற்காக ஜீவித்திருக்கிறார்களென்பது நிச்சயமாகிறது. ஜீவிப்பதற்காக உண்பதென்றிருந்தால் இத்தனை நோய்கள் ஏன்! இத்தனை கஷ்டங்கள் ஏன்! இத்தனை மருந்துகள் ஏன்! இத்தனை ஊசிகள் ஏன்! இத்தனை வைத்தியங்கள் ஏன்! இத்தனை மரணங்கள் ஏன்! "எதனால் ஒருவன் வாழ்கிறானோ, எதனிடம் ஒருவன் பற்று வைத்துக் களிக்கிறானோ அதுவே அவனுக்கு யமனாய் முடியும்" என்று அனுபவசாலிகள் சொல்லுவார்கள். அது இந்தச் சாப்பாட்டு

சாமன்கள் விஷயத்தில் முற்றிலும் உண்மை. ஜீவிப்பதற்காக மட்டும் உணவருந்துபவர்களைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டாம். அவர்கள் தான் எதைச் சாப்பிட வேண்டும், எப்பொழுது சாப்பிட வேண்டும் என்னும் முறையறிந்து முறைப்படி சாப்பிடுவார்களே !

இப் பாரிச வாய்வு எனும் நோயும் உணவின் கோளாறுகளினுல் உண்டாவதே. நம்முடைய நாட்டில் அநேகமாய்ப் பருப்பில்லாமல் சாப்பாடே கிடையாது. பருப்பு நல்ல புஷ்டியுள்ள ஆகாரம் தான். ஆனுல் அதையும் ஒரு அளவுடன் சேர்த்துக் கொண்டால் நல்லது. வாய்க்கு ருசியாயிருக்கின்றதென்று காலை, பகல், மாலை, இரவு எல்லா வேளைகளிலும் பருப்பாகவே சாப்பிட்டு வந்தால் உடல் என்ன ஆவது ! காலையில் இட்லி சாம்பார். மத்தியானம்தான் எத்தனை விதம் ! பருப்பு நெய், பருப்பு சாம்பார், பருப்பு ரசம் பருப்பு காய்க் கறி கூட்டு, பொரியலில் பருப்பு. இத்தனையும் போதாதென்று கடலைப் பருப்பு வேறு பலவித உருவங்களில் நம் உணவில் இடம் பெறுகிறது. மாலை டிபனில் பஜ்ஜி, பக்கோடா, ஓமப்பொடி, காராபூந்தி, லட்டு, மோகன் டால் சாப்பிடுகிறார்கள். இவைகளெல்லாம் கடலை மாவிலிருந்து செய்யும் பண்டங்கள் தானே ! இரவிலாவது வெறும் ரசமோ, குழம்போ வைத்தால் பிடிக்கிறதா ? பிடிக்காத காரணத்தால், (வயிற்றுக் கல்ல ! வாய்க்கு !) அப்பொழுதும் கூட பருப்புப் போட வேண்டும். வீட்டிலாவது சகோதரிகள் அவ்வப்போது பருப்பு போடாமல் சமையல் பத்தியமாய்ச் செய்வார்கள். ஓட்டல், ஹாஸ்டல், மெஸ் இவைகளில் விமோசனமே கிடையாது. தினமும் எந்த வேளையிலும் பருப்புதான். இவர்கள் வயிறு கெடவும், வாய்வு உடம்பில் ஏற்படவும் கேட்கவேண்டுமா ! பிறகு முதுகுவலி, பிடிப்பு, கை கால் வலி பிடிப்பு. பிறகு வயிற்றில் காற்றோட்டம். "கர் முர்" என்ற உறுமல் சத்தம். பிறகு காற்று ஏற்படாமல், அஜீரணம். உணவில் வெறுப்பு, நரம்பு சக்தி யில்லாமை. கடைசியில் பாரிச வாய்வு வந்து கை கால் விழுந்துவிடும்.

"பருப்பு சாப்பிட்டால் என்ன ! அதற்குத் தான் பெருங்காயம் இருக்கிறதே ! எல்லாவற்றிலும் கலந்து விட்டால் போகிறது ! பருப்பை ஜீரணித்து விடும். வாய்வு உபத்திரவம் ஏற்படாது" என்று சொல்லலாம்.

அப்படி அளவிற்கு மிஞ்சிப் பருப்பைச் சாப்பிடுவானேன் ! அதற்காகப் பெருங்காயத்தைக் கரைப்பானேன் ! பெருங்காயம் என்றும் துணை செய்யுமா ! எல்லாம் உடலில் ஓரளவு ரத்தம் நன்றாய் இருக்கும் வரைக்கும்தான். பிறகு, சற்று வயதான பின் ரத்தோட்டம் மாறுதலடைந்ததும் பல கெட்ட குணங்களைக் காட்டுகின்றது. அதனுடைய முடிவுதான் இந்தப் பாரிச வாய்வு.

உடலில் வாய்வு அதிகம் ஆக ரத்த ஓட்டம் சரிவர ஏற்படுவதில்லை. நரம்பு பலவீனம் உண்டாகிறது. அது சிறிது சிறிதாகவோ, திடீரென்றோ, மூளையில், கை கால் பகுதிகளைச் சேர்ந்த (மூளை) பாகத்திற்கு ரத்தம் போவது நின்று விடுகிறது. அதனுல் மூளை இரத்த போஷணை இன்றித் தன் வேலையைச் செய்ய மறுக்கிறது. அதனுல் முடியவில்லை. அதற்கு நாம் செய்கிறதென்ன ! பலவித மருந்துகளை உடலில் செலுத்துகிறோம். அம்மருந்துகளின் வேகத்தால் ரத்தத்திலுள்ள வாய்வு கலைந்து சிறிது குணமேற்படும். அம்மருந்தின் வேகத்தால் மூளைக்கும் சிறிதளவு ரத்தம் செல்லும்.



டாக்டர் :—என்ன ஸார், இது ? ஜுரத்தோடு கண்டதை யெல்லாம் வாங்கித் தின்கிறீரே ! கஞ்சி மட்டும் தானே சாப்பிடச் சொன்னேன் ?

நோயாளி :—நீங்கள்தான் மிக்ஸர் வாங்கிச் சாப்பிடச் சொன்னீர்கள் !

டாக்டர் :—அடாடா ! இந்த மிக்ஸர் இல்லை, ஸார், அது ! என் கம்பவுண்டரிடம் அல்லவா மிக்ஸர் வாங்கிச் சாப்பிடச் சொன்னேன் !

அதனுல் சிறிது குணமாவது போலத் தோன்றும். மருந்து உபயோகத்தில் இருக்கும் மட்டும் சற்று குணமாகவே இருக்கும். ஆனுல் மருந்தைக் கைவிட்டால், பூமியின் ஆகர்ஷண சக்தியென்னும் எதிரி வென்றுவிடுகிறது. மறுபடியும் பழைய நிலைக்குத் திரும்பவேண்டியதுதான். இந்தப் பாரிச வாய்வுக்கு ஆங்கில வைத்தியத்தை விட நாட்டு வைத்திய முறை சிறிது பலன் அளிக்கிறது. ஆரம்ப நோயாளிகளுக்குக் குணமும் செய்கிறது. அதிலும் மலையாள வைத்தியமாகிய நவரக்கிழி போன்றவை பரவாயில்லை. ஆனுல் இத்தனை வைத்தியமும் செய்து ஒன்றுமே குணமில்லாதவர்களும் கைவிடப்பட்டு பரலோக யாத்திரைக்குச் சீட்டு எழுதிக் கொடுத்து விட்ட பல பாரிச வாய்வு நோயாளிகள் இந்த சிரசாசனத்தைச் செய்து முற்றிலும் குணமாகி ஆரோக்கியமாக இருக்கின்றார்கள்.

முதலில் எடுத்ததும், தலைகீழாக நிற்க முடியாது. அவர்களுக்குத்தான் கைகால் சுவாதீனமில்லையே! முதலில் ஒரு மாதம் சர்வாங்காசனத்தை ஒரு நிமிஷம் மூன்று தடவை ஆரம்பித்து, சிறுக சிறுக ஐந்து நிமிஷம் மூன்று தடவை செய்யப் பழக வேண்டும். இதற்குப் பிறருடைய உதவி மிக அவசியம். அதன் பின் பிறருடைய உதவியைக் கொண்டே சிரசாசனத்தில் சில விநாடிகள் நிற்க வேண்டும். இம்மாதிரி ஒரு நிமிஷம் மூன்று தடவை செய்விக்க வேண்டும். சிறிது சிறிதாக வாரத்திற்கு அரை நிமிஷ விதம் நேரத்தை அதிகமாக்கிக் கொண்டே பத்து நிமிஷம் மூன்று தடவை செய்யப் பழகிவிட்டால் மூளைக்கு நன்றாய் ரத்தப் பாய்ச்சல் கிடைக்கிறது. இரத்தப் பாய்ச்சல் இல்லாமலிருந்த கால் கைப் பகுதிகளுக்கு மறுபடி ரத்தம் பாய்ந்து சிறிது சிறிதாக அப் பகுதி வேலை செய்ய ஆரம்பிக்கிறது. இதற்குள் நோயாளிக்கே இரண்டு மூன்று மாதங்களில் தானே சுயமாகச் செய்யும் சக்தியும் ஏற்படலாம். எல்லாம் அவரவர்களின் நிலைமையைப் பொறுத்திருக்கிறது. இன்று செய்து நாளை பலனை யோகத்தில் எதிர்பார்க்க முடியாது. பல மாதங்கள் செய்ய வேண்டும். ஆனுல் பலன் நிச்சயம் உண்டு. (தொடரும்)

# டாக்டர் சுசீலா

கி. ரங்கராஜன்

"அம்மா, உங்களை ஒன்று கேட்கலாமா? நீங்கள் ஒன்றும் தவறாக நினைக்கக் கூடாது" என்று ஆரம்பித்தாள் டாக்டர் சுசீலா.

"என்ன அர்த்தமற்ற கேள்வி, டாக்டர்! எதற்காக அப்படி நான் நினைக்க வேண்டும்? சும்மா சொல்லுங்கள்" என்றாள் கமலா.

"நானும்தான் நினைத்துப் பார்க்கிறேன். எத்தனையோ ஊர்களில் இருந்திருக்கிறேன். எத்தனையோ மக்களைப் பார்த்துப் பழகியிருக்கிறேன். ஆனால் உங்களைப் போன்ற ஒரு தோழியை இது வரையில் நான் பார்த்ததில்லை. உங்களுடைய ஜாதி வேறு, என் ஜாதி வேறு, அப்படி இருந்தும் சொந்த சகோதரியைக் காட்டிலும் என்னுடன் அன்பு வைத்துப் பழகுகிறீர்களே! என் குழந்தையுடன் நீங்கள் பேசும்போது, உங்கள் கண்களில் ஒரு பரபரப்பு ஏற்படுகிறதே! அந்தப் பரபரப்புக்குக் காரணம் என்ன?"

"நமக்குள் ஒருவருக்கு ஒருவர் இருக்கும் அன்புதான் அதற்குக் காரணம். அந்த அன்பைத் தவிர வேறு என்ன இருக்க முடியும்! அதிருக்கட்டும். திடீரென்று உங்களுக்கு இந்த நினைவு எழுவானேன்? நான் ஏதாவது தவறு செய்து விட்டேனா? சொல்லுங்கள் டாக்டர்."

"நீங்கள் தவறுதான் செய்திருக்கிறீர்கள். பெற்ற தாயைக் காட்டிலும் என் மகளிடம் நீங்கள் அன்பும், ஆசையும் வைத்திருக்கிறீர்களே! அது தவறுதானே. அன்று என் மகள், பத்மஜாவின் பரத நாட்டிய அரங்கேற்றம் நடந்ததே, அப்போதே உங்களைக் கவனித்தேன். உங்கள் கண்ணில் நீர் துளித்தது. 'நமக்குக்கூட கண்ணில் ஜலத்தைக் காணோம், இந்த அம்மாள் ஏன் இப்படி அழுகிறார்' என்று எண்ணினேன். உண்மையைச் சொல்லுங்கள். என் குழந்தை மீது உங்களுக்கு இத்தனை வாஞ்சையும், பாசமும் ஏற்படுவதற்கு வேறு ஏதாவது காரணம் இருக்க வேண்டும்."

"ஆம். நீங்கள் நினைப்பது சரி. வேறு ஒரு காரணமும் உண்டு. எங்கே கண்டு பிடியுங்கள் பார்க்கலாம். நீங்கள்தான் டாக்டராயிற்றே!"

"அவற்றை எல்லாம் எங்கள் ஆசிரியர் கற்பிக்கவில்லை. ஒருவர் உள்ளத்தை மற்றவர் அறிந்து கொள்ளும் சக்தி எனக்கு இல்லை."

"அந்தச் சக்தி உங்களுக்கு நிறைய உண்டு. உங்கள் வாயினாலேயேதான் சொல்லி விட்டீர்களே, பெற்ற தாயை விட நான் உங்கள் குழந்தையிடம் அன்பு வைத்திருக்கிறேன் என்று. ஏதோ ஒரு தாய்மை உணர்ச்சி என் நெஞ்சில் போராடுகிறது. உங்கள் குழந்தையைப் பார்க்கும் போது, அவள் பேசிச் சிரிக்கும் போது, என் பெண் கல்யாணியின் ஞாபகம் வருகிறது. உண்மையைச் சொல்லி விடுகிறேன். உங்கள் வீட்டுக்கு வருவது, உங்களுடன் அன்பாகப் பேசுவது, இவற்றுக்கெல்லாம் காரணம் நீங்கள் பத்மஜாவின் தாய் என்ற ஒரே காரணத்துக்காகத்தான்."

சட்டென்று டாக்டர் சுசீலாவின் முகத்தில் வேதனைக்குறி படர்ந்தது.

"அம்மா இத்தனை நாட்களாக நீங்கள் சொல்லவில்லையே, உங்களுக்கு ஒரு பெண் குழந்தை உண்டு என்பதை. அந்தக் குழந்தை இப்பொழுது..." என்று ஆரம்பித்தவள் சட்டென்று நிறுத்திக் கொண்டாள்.

"அம்மா, டாக்டர்! ஆண்டவன் என்னை மலடி ஆக்கவில்லை என்பது உண்மைதான். மணி மணியாய் இரண்டு ஆண் குழந்தைகளைக் கொடுத்திருக்கிறார். அத்துடன் விட்டிருக்கலாம். எனக்கு விவாகமான இரண்டு மூன்று வருஷங்களுக்குப் பிறகு நான் கருவுற்றேன். இரட்டையாக இரண்டு பெண் குழந்தைகள் பிறந்தன. அவற்றில் ஒன்று பிறந்த பொழுதே இறந்தது. மற்றொன்று தங்கியது. அது பன்னிரண்டு வருஷம் வளர்ந்து, மூன்று நாள் விஷ ஜுரத்துக்குப் பலியாகிவிட்டது. அது இறந்து இப்பொழுது நாலு வருஷமாகிறது. இரட்டையாகப் பிறக்கும் குழந்தைகள் அநேகமாகத் தங்காது என்பார்கள். அந்தக் கூற்று என்வரைக்கும் மெய்யாகி விட்டது.

"அவள் இறந்த பிறகு எங்கள் வீட்டில் நவராத்திரியின் போது கொலு வைப்பதில்லை. இந்த வருஷம்தான் கொலு என்று வைத்தேன். காரணம், உங்கள் மகள் பத்மஜாதான். ஒன்பது நாட்களும், உங்கள் குழந்தை என் வீட்டிலேயே இருந்தாள். எங்கள் குழந்தைகளுடன் பழகினாள். அவளைக் கருதியே பெட்டியில் பல நாட்களாகத் தூங்கிக் கொண்டிருந்த பொம்மைகளை எடுத்து அடுக்கினேன். என் செய்கை என் கணவருக்கே ஆச்சரியமாக இருந்தது. அடுத்த வருஷம் எப்படியோ! பல வருஷங்கள் எங்கெல்லாமோ சுற்றிவிட்டு, என்னுடைய பாக்கியம் நீங்கள் இந்த ஊருக்கு வந்திருக்கிறீர்கள். இன்னும் சில வருஷங்கள் இதே ஊரில் இருக்கலாம் அல்லவா டாக்டர்!" என்று ஆவலோடு கேட்டாள் கமலா.

"கவலைப்படாதீர்கள். நான் இல்லாவிட்டாலும் பத்மஜா உங்களுடன் இருப்பாள். போதுமா!"

"அது எப்படி முடியும் டாக்டர்!"

"முடியுமோ, முடியாதோ அதைப் பற்றி இப்பொழுது கவலைப்படுவானேன். எழுந்திருங்கள், இன்று சபாவில் கச்சேரியாயிற்றே. அதற்குப் போக வேண்டாமா" என்று சொல்லிக்கொண்டே டாக்டர் சுசீலா எழுந்திருந்தாள்.

கமலாவும் எழுந்தாள்.

சில தினங்கள் சென்றன. ஒரு நாள் டாக்டர் சுசீலா, கமலாவின் வீட்டுக்கு வந்தாள்.

அவள் வந்த வேகத்தையும், பரபரப்பையும் கண்ட கமலா "என்ன டாக்டர் என்ன விசேஷம். ஏன் உங்கள் உடம்பு இப்படி நடுங்குகிறது!" என்று கேட்டாள் கவலையுடன்.

"ஒன்றுமில்லை. உங்களை அப்பொழுதே கேட்க வேண்டும் என்று நினைத்தேன்."

"என்ன கேட்க வேண்டும் என்று நினைத்தீர்கள்? தாராளமாய்க் கேளுங்கள்."

"முதன் முதலாக உங்களுக்கு இரட்டைக் குழந்தைகள் பிறந்தனவே அப்போது நீங்கள் இந்த ஊரில்தானே இருந்தீர்கள்!"

"அதைப் பற்றி என்ன இப்பொழுது!"

"சொல்லுங்கள், கமலா!"

"நாங்கள் கும்பகோணத்தில் இருந்தோம். சர்க்கார் ஆஸ்பத்திரியில்தான் குழந்தைகள் பிறந்தன. நீங்கள் எதற்காக இதை கேட்கிறீர்கள்!"

"எனக்குத் தெரிந்த ஒருத்தி பல வருஷங்களுக்கு முன் உங்களைக் கும்பகோணத்தில் பார்த்திருப்பதாகச் சொன்னாள்."

"யார் அவள்!"

"யாரோ ஒரு நர்ஸ். அது இருக்கட்டும் உங்கள் குழந்தையின் படம் ஏதாவது உங்களிடம் இருக்கிறதா!" என்று கேட்டுக் கொண்டே, படங்கள் மாட்டியிருந்த சுவரைக் கவனித்தாள்.

"இதோ, இதுதான் இறந்துபோன என் பெண் குழந்தையின் படம்" என்று சொல்லிக் கொண்டே, அங்கேயே மாட்டியிருந்த படம் ஒன்றை எடுத்து டாக்டரிடம் கொடுத்தாள், கமலா.

சுசீலா அந்தப் படத்தைக் கூர்ந்து கவனித்தாள்.

"என்ன படத்தை அப்படிப் பார்க்கிறீர்கள்!" என்று கேட்டாள் கமலா.

"இந்தக் குழந்தை இப்பொழுது இருந்தால் அதற்கு என்ன வயதிருக்கும்!"

"உங்கள் குழந்தையின் வயதுதான் இருக்கும். எதற்காக இந்தக் கேள்விகள் எல்லாம்!"

டாக்டர் பதில் ஒன்றும் சொல்லவில்லை. ஒரு முறை தன் கையிலிருந்த படத்தையும், கமலாவையும் மாறி மாறிப் பார்த்தாள்.

"சரி, படத்தை மாட்டி விடுங்கள். என்னமோ சொல்ல வந்தவள் எதையோ சொல்லிக் கொண்டு இருக்கிறேன். நான் அவசரமாக எங்கள் ஊர்ப் பக்கம் போகவேண்டியிருக்கிறது. அங்கே எங்கள் உறவினர் ஒருவருக்கு உடம்பு குணமில்லை. அவரைப் பார்த்து வரப்போகிறேன். திரும்பி வர பதினைந்து நாட்கள் செல்லும். அதுவரை பத்மஜா உங்களுடன் இருக்கலாமா!"

"ஏன், இருப்பதற்கு என்ன தடை சொல்லப் போகிறேன். பேஷாக இருக்கட்டும். நீங்கள் எப்பொழுது போக வேண்டும்!"

"இன்றே போனால் கூட நலம்தான். என்கூட வந்து குழந்தையை அழைத்துப் போகிறீர்களா!"

"இதோ வந்தேன்" என்று ஆனந்தத்துடன் சொல்லிக் கமலா உடனே புறப்பட்டாள்.

கமலா டாக்டர் சுசீலாவுடன் அவள் வீட்டுக்குச் சென்றாள். அங்கே சிறுமி பத்மஜா தனக்கு வேண்டிய உடைகளை எல்லாம் எடுத்துத் தயாராய் வைத்துக் கொண்டு காத்துக் கொண்டிருந்தாள்.

டாக்டர் சுசீலா பத்மஜாவைக் கட்டித் தழுவி உச்சி மோந்து "பத்மஜா! கமலா அம்மாவோடு போயிரு. நான் ஊருக்குப் போய்விட்டு வந்து விடுகிறேன்" என்று சொல்லி அனுப்பினாள்.

பத்மஜாவும் ஒரு குழந்தை தாயிடம் ஓடி வருவது போல கமலாவிடம் ஓடி வந்து விட்டாள்.

•  •  •

டாக்டர் சொன்ன அந்தப் பதினைந்து நாளும் சென்றன. ஒரு மாதம் கூட ஆயிற்று. ஆனால் அவள் திரும்பி வரவில்லை. ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்திருந்த கமலாவுக்கு, அன்று சுசீலாவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. சற்று நீண்டதாக இருந்த அந்தக் கடிதத்தைப் படித்தாள்.

"பிரிய சகோதரி,

இந்தக் கடிதம் உங்களுக்குச் சற்று ஆச்சரியத்தைக் கொடுக்கலாம்.

என்னுடைய குடும்ப வரலாற்றை இது வரை யாரிடமும் சொன்னதில்லை. முக்கியமாக உங்களுக்குக் கூடச் சொல்லவில்லை. தயவு செய்து பொறுமையாகப் படியுங்கள்.

"எனக்கு விவாகமாகிப் பல வருஷங்களாகின்றன. ஆரம்பத்தில் எங்கள் வாழ்க்கை ஆனந்த மயமாக இருந்தது. ஆனால் அந்த ஆனந்தம் அதிக நாள் நீடிக்கவில்லை. எங்கிருந்தோ ஒருத்தி எங்கள் இன்ப வாழ்க்கைக்கு குறுக்கே வந்து முளைத்தாள். கும்பகோணத்தில் செட்டிப் புதுத் தெருவில் தஞ்ச நாயகி என்ற மோகினியின் வலையில் என் கணவர் விழுந்து விட்டார். அவள் வஞ்சகச் சூழ்ச்சியில் சிக்குண்ட என் கணவர் மீள வகை தெரியாமல் அவளிடமே அடைக்கலம் புகுந்து விட்டார். கைப்பொருளும், உடல் வலிமையும் கரைந்து போனபின்புதான் என் நினைவு அவருக்கு எழுந்தது. கடைசியாக ஒருநாள் தள்ளாடிக் கொண்டே வீட்டுக்கு வந்தபோது அவரைக் கண்கொண்டு பார்க்க முடியவில்லை. தோல் உடம்பாக, எலும்புந் தோலுமாக இருந்த அவரை எனக்கே அடையாளம் தெரியவில்லை. இந்த மட்டுமாவது வீடுவந்து சேர்ந்தாரே என்று நான் எண்ணிச் சந்தோஷப் பட்டேன். அந்தச் சந்தோஷம் நிலை நிற்கவில்லை. ஏற்கெனவே அவர் உடலில் குடியிருந்த அந்தப் பயங்கரக் காச நோய், அவரைக் கொன்று விட்டது.

அப்பொழுது எனக்குப் பதினெட்டு வயது. மெட்ரிகுலேஷன் வரை படித்திருந்தேன். அந்தப் பாவி, தஞ்சநாயகி பறித்துக்கொண்ட பணத்தில் மீதியாக ஒன்றுமில்லை. என் மஞ்சள் காணியை விற்று மேலே டாக்டருக்குப் படித்துப் பட்டமும் பெற்றேன். அந்தச் சமயத்தில் ஒருநாள், அறிமுகம் இல்லாத ஒருவரிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. கடைசிப் பக்கத்தைப் புரட்டினேன். 'தஞ்ச நாயகி' என்று கையெழுத்திட் டிருந்தது.

இதென்னடா, திரும்பவும் வம்பு என்று நினைத்துக்கொண்டு வேகமாகப் படித்தேன்.

தன்னுடைய உயிர் உடலைவிட்டு நீங்கும் தறுவாயில்தான் இருப்பதாகவும், ஒரு முறை என்னைப் பார்க்க விரும்புவதாகவும், என்னுடைய கணவரின் பொருள் ஒன்று தன்னிடம் இருப்பதாகவும், அதை என்னிடம் சேர்ப்பித்து விட்டு, உயிரைவிட நினைத்திருப்பதாகவும் எழுதியிருந்



மனைவி:—கதையை எப்படி முடித்திருக்கிறீர்கள்? ஒருவாறு சந்தோஷமாகத்தானே?

கணவன்:—இல்லை, இல்லை. கஷ்டத்திலேதான் முடிகிறது!

மனைவி:—அது எப்படி?

கணவன்:—காதலனும் காதலியும் கடைசியில் கல்யாணம் செய்து கொண்டு விடுகிறார்கள்!

தான். காரை எடுத்துக்கொண்டு, அவள் குறித்திருந்த விலாசமுள்ள வீட்டுக்குச் சென்றேன்.

ஒரு பாயில் ஒரு பெண்ணுருவம் படுத்திருந்தது. அதற்குப் பக்கத்தில் ஆறு ஏழு வயது மதிக்கத்தக்க ஒரு பெண் குழந்தை இருந்தது. என்னைக் கண்டதும் அந்தப் பெண்ணுருவம் எழுந்திருந்து 'வாருங்கள், உங்களுக்காகத்தான் காத்திருக்கிறேன். இதோ தூங்கும் இந்தக் குழந்தை உங்கள் வயிற்றில் பிறக்க வேண்டியவள். தவறிப்போய் என் வயிற்றில் பிறந்து விட்டாள். உங்கள் கணவர் இட்ட இந்தப் பிச்சையை இன்று வரைக் காப்பாற்றி விட்டேன். இனியும் அது சாத்தியமில்லை. என்று நினைக்கிறேன். உங்கள் கணவர், அற்ப ஆயுளில் தம்முடைய உலக யாத்திரையை முடித்துக்கொண்டு போய்விட்டார். அதற்கு ஓரளவு நான் காரணம். இன்றோ நாளையோ நான் இறப்பது உறுதி. என்னுடைய பாவங்களுக்கு எல்லாம் பிராயச்சித்தமாக ஏதாவது ஒன்றை நான் செய்ய வேண்டாமா! ஆண்டவன் இந்தக் குழந்தையின் தலையில் என்ன எழுதி யிருக்கிறானோ! பிற்காலத்தில் என் பெயரைச் சொல்லிக் கொண்டு அது சீரழிந்து போக விரும்பவில்லை. உங்களுடைய கணவர் கள்ளங் கபடமற்ற வெள்ளை உள்ளம் படைத்தவர். அவரை வஞ்சித்த நான் இறப்பதற்கு முன் ஒரு நல்ல காரியத்தைச் செய்கிறேன். பெரிய மனது பண்ணி இக் குழந்தையை ஏற்றுக் கொள்ளுங்கள். இதற்குத் தாயும் தந்தையுமாக இருந்து குழந்தையைக் காப்பாற்றுங்கள்' என்று சொல்லிக்கொண்டே தூங்கிக் கொண்டிருந்த அந்தக் குழந்தையை மிருந்த சிரமப்பட்டுத் தூக்கி என் மடி மீது வைத்தாள்.

என் மனம் அப்பொழுது இருந்த நிலையில் ஒன்றும் செய்யத் தோன்றவில்லை. குழந்தையை அங்கீகரிப்பதா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருக்கும்போதே, அதன் தாய் மயக்கம் போட்டு விழுந்துவிட்டாள். பிறகு அவளுக்கு ஞாபகமே வரவில்லை ஏற்கெனவே துர்ப்பலமான அவள் உடல், உள்ளச் சோர்வினால் ஒட்டிக்கொண்டிருந்த அந்தத் துளி உயிரையும் இழந்துவிட்டது.

சிந்தித்துப் பயன் ஒன்றுமில்லை என்ற துணிவுடன் குழந்தையை என்னுடன் கூட்டிக் கொண்டு வந்து வளர்த்தேன். கொஞ்சம் கொஞ்சமாக அதனிடம் எனக்கு அன்பு வளர்ந்தது.



தாய்மை உணர்ச்சி ஏற்பட்டது. பத்மஜா என்று பெயரிட்டு வளர்த்த இக் குழந்தை இன்று வரை என் குழந்தையாக வளர்ந்து வந்தாள். என் வயிற்றில் பிறந்தால்தான் என் குழந்தையா, என் கணவரின் குழந்தை என் குழந்தைதானே என்று எண்ணி மகிழ்ந்து வந்தேன். என்ன பேதமை!

கமலா, உங்கள் பொறுமையை வெகு நேரம் சோதிக்க விரும்பவில்லை. இதோ முடித்து விடுகிறேன். இத்துடன் என் வாழ்க்கை வரலாறும் முடிகிறது. கேளுங்கள்.

தஞ்ச நாயகி என் கணவரின் அன்புக்குரியவள். அவள் வயிற்றில் பிறந்த அந்தக் குழந்தை என் குழந்தை என்று எண்ணியிருந்த என்னைக் கடவுள் மோசம் செய்து விட்டார். ஆஸ்பத்திரியிலே உள்ள ஒரு நர்ஸ் வாய் மூலமாக, அந்த மோசம் இப்பொழுதுதான் வெளிப்பட்டது.

கும்பகோணம் ஆஸ்பத்திரியில் உங்களுக்கு இரட்டைக் குழந்தை பிறந்தது என்றீர்களே. அவற்றில் ஒன்று பிறந்தவுடன் இறந்ததாகத் தானே நினைத்தீர்கள், சொன்னீர்கள்? அது தவறு. உங்கள் குழந்தை இறக்கவில்லை. உங்கள் குழந்தை பிறந்த அதே சமயத்தில் தஞ்ச நாயகிக்கும் குழந்தை பிறந்தது. ஆனால் தஞ்ச நாயகியின் குழந்தை இறந்து விட்டது. அப்பொழுது இருந்த நர்ஸ் உங்கள் குழந்தைகளில் ஒன்றை அவள் குழந்தையாக மாற்றி விட்டதனால், இறந்துபோன அவள் குழந்தை உங்கள் குழந்தையாக முடிந்தது.

யாருக்காக இத்தனை நாள் இந்த உடற்பாரத்துடன் வாழ்ந்தேனோ, யாரை என் கணவரின் குழந்தை என்று மகிழ்ந்து போற்றினேனோ அது உங்கள் குழந்தை. எனக்கும் அதற்கும் இனி எந்த வகையிலும் சம்பந்தமில்லை.

'ஒருத்தி மகனைப் பிறந்து ஒருத்தி மகனை வளர்த்த' அந்த மாயக் கண்ணனைப் போல் இது காறும் என்னிடம் உங்கள் குழந்தை வளர்ந்து விட்டது. இனி அந்தப் பொறுப்பைத் தாங்களே ஏற்றுக் கொண்டு எனக்கு விடுதலை அளியுங்கள்.

கோபத்தில் குழந்தையை வைதிருப்பேன், அடித்திருப்பேன். அவற்றை யெல்லாம் நீங்கள் பொறுத்துக் கொள்ள வேண்டும்.

குழந்தையை ஜாக்கிரதையாகக் காப்பாற்றுங்கள். அதற்கு என் இதய பூர்வமான ஆசி. உங்களிடம் நான் விடைபெற்றுக் கொள்ளுகிறேன். உங்களுடைய குழந்தையை இத்தனை நாள் பிரித்து வைத்த என்னை மறந்து மன்னிக்க வேண்டுகிறேன். வணக்கம். சுசீலா."

என்று எழுதியிருந்த கடிதத்தைப் படித்து முடித்தாள் கமலா. நீண்ட பெரு மூச்சு அவள் இதயத்திலிருந்து வெளிவந்தது.

அப்பொழுது அவள் உள்ளத்திலே தோன்றின பல்வேறு உணர்ச்சிகளை இப்பொழுது நினைத்துப் பார்த்துச் சொல்ல முடியாது.

"இழந்த மணிபுத்ரவு எதிர்ந்ததனையாளும்
பழந்தனம் மறைந்தன படைத்தவரை ஒத்தாள்"

என்ற நிலையில் அவள் இருந்திருக்க வேண்டும்.

அப்போது பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பி வந்த பத்மஜா, "அம்மா!" என்று கூவிக்கொண்டு உள்ளே வந்தாள். "இதோ வந்தேன் என் கண்ணே!" என்று வேகமாகப் போய் அவளை இறுகக் கட்டித் தழுவிக் கொண்டாள் கமலா.

பத்மஜாவுக்கு ஒன்றும் புரியவில்லை. அவள் அணைப்பில் இருந்த இனந்தெரியாத ஒரு இன்ப சுகத்தில் தன்னை மறந்து லயித்திருந்தாள்.

# கச்சிதமான தோற்றம்






வீட்டிலாகட்டும், ஆபீஸிலோ அல்லது சமூகக் கூட்டங்களிலோ ஆகட்டும், சொகுசும் வயணமுமான தோற்றமுடையவர்களுக்கு தனி மதிப்பு இருக்கத்தான் செய்கிறது. தவறாமல் டாம்கோ பரிமள காஸ்டர் கேச தைலத்தையும் ஷாம்பூவையும் வழக்கமாக உபயோகித்து வாருங்கள்.

**டாம்கோ பரிமள**
**காஸ்டர் கேச தைலம்**
மற்றும்
**தேங்கா யெண்ணை**
**ஷாம்பூ**




தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

TH: 5486

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

# நாளுக்கு நாள் அதிக தெளிவானதும் அழகானதுமான சருமம்

ரெக்ஸோனாவிலி
ருக்கும் 'கேடில்'
உங்கள் சருமத்திற்கு
புது ஆரோக்கியமும்
எழிலும் தரும்.




## ரெக்ஸோனா

'கேடில்'* கலந்த சோப்
இது ஒன்றே

* சருமத்தை மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர் இது.

ரெக்ஸோனா ப்ரொப்ரைடரீ லிட்., க்காக இந்தியாவில் தயாரித்தவை R.P. 85-50 TM

REGD. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*